4 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

11) மதுரை 4—8—73 சனி (மலர் 182

பதிவு எண் எம். 8798.

## ஒரே நாளில் தங்கத்தின் விலை ரூ. 16 உயர்ந்தது

மதுரை, ஆக 2—

மதுரையில் தங்கத்தின் விலை ஒரு பவுனுக்கு (8 கிராமுக்கு) ஒரே நாளில்ரூ.16 உயர்ந்துள்ளது. ஒரு பவுன் தங்கம் ரூ 252 ஆக இருந்தது. திடீரென்று 268 ரூபாயாக மாறியது.

பம்பாயில் 10 கிராம் தங்கம் ஒரே நாளில் 347— ரூபாயிலிந்து ரூ 360 க்கு எட்டி விட்டது.



# கேரளத்தில் பந்த் அமோக வெற்றி

நமது சிறப்புச் செய்தியாளர்)

திருவனந்தபுரம் ஆக. 3—

12 அவுன்ஸ் ரேஷன் வேண்டும், பதுக்கல் 'கள்ள மார்க்கெட்டுக்குத் தடை விதிக்க வேண்டும் போன்ற கோரிக்கைகளுக்காகவும், விலைவாசி உயர்வுக்குகண்டனம் தெரிவித்தும் நேற்று கேரள மாநிலத்தில் "முழு அடைப்பு" (பந்த்) வெற்றிகரமாக நடைபெற்றது. பல பகுதிகளிலும் போலீசார் தடியடி, கண்ணீர்புகைவீச்சு நடத்தினர்.

மார்க்சிஸ்ட் கட்சி உட்பட ஐந்து எதிர்க்கட்சிகளின் தலைமையில் இந்த 'பந்த்' நடத்தப்பட்டது.

ஆலப்புழை மாவட்டம் பந்தளத்தில் துப்பாக்கிச்சூடு நடைபெற்றது. மாவட்ட வாரியாக கிடைத்துள்ள செய்திகள் வருமாறு:—

திருவனந்தபுரத்தில் பள்ளி, கல்லூரிகளுக்கு ஆகஸ்ட் முதல் தேதியிலிருந்து 5ம தேதி வரை விடுமுறை விடப்பட்டிருந்தது. நகரத்தில் தடை உத்திரவு போடப்பட்டிருந்தது.

திருவனந்தபுரம் நகரம் பாலராமபுரம், நெய்யாற்றின்கரை, பாரசாலை உட்பட மாவட்டத்தின் அனைத்துப் பகுதிகளிலும் பூரண 'பந்த்' நடைபெற்றது

இந்தப் பகுதிகளிலெல்லாம எவரும் வற்புறுத்தாமலே கடைகள் — மார்க்கெட்டுகள் மூடப்பட்டு கிடந்தன நெடுமாங்காடு, வெள்ளறை உட்பட்ட மலையோரப் பகுதிகளில் தோட்டத் தொழிலாளர்களும் கடலோரப்பகுதிகளில் தென்னை 'கயிறு' பிரிக்கும்தொழிலாளர்களும் வேலை நிறுத்தம செய்தனர்.

பாலராமபுரத்தில் நெசவுத் தொழிலாளர்கள், மாவட்டத் தலைநகரில் இந்துஸ்தான் லாடக்ஸ்' ஆலைத் தொழிலாளர்கள், டிட்டானியம் தொழிலாளர்கள் உட்பட ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலை நிறுத்தம செய்தனர்.

'ஆட்டிங்கல்' பகுதியில் முழு அடைப்பு வெற்றிகரமாக நடைபெற்றது.

தம்பானூர், கிழக்கே கோட்டை, பாப்பனங்கோடு ஆகிய திருவனந்தபுரம நகரின் மூன்று பஸ் நிலையங்களிலும பஸசள் ஒதுக்கி விடப்பட்டிருந்தன. தொலை தூரப் பஸ்கள் ஒன்று இரண்டு பலத்த போலீஸ் காவலுடன் ஓடியது என்ருலும், காலை 11-30 மணி அளவில் அவைகளும் ரத்துச் செய்யப்படடுவட்டன.

### கோல்லம்

கொல்லம் மாவட்டத்தில் கொல்லம் நகரம், கருநாகப்பள்ளி, கொட்டாரக்கரை ஆகிய முக்கிய பகுதிகளில் முழு அளவில் 'பந்த' நடை நடைபெற்றது

பள்ளி, கல்லூரிகள் மூடப்பட்டு இருந்தன. மாவட்டத்தில் ஓட்டுக் கம்பனி தொழிலாளர்கள், முந்திரிப்பருப்பு தொழிலாளர்கள் ஆயிரக்கணக்கில் வேலை நிறுத்தத்தில் கலந்து கொண்டனர். பஸ் போக்குவரத்து அடியோடு பாதிதது

### கோட்டயம்

கோட்டயம் மாவட்டத்

(4-ம் பக்கம் பார்க்க)

## சகல இடதுசாரி, ஜனநாயக கட்சிகளுக்கும்

# மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் வேண்டுகோள்

கல்கத்தா, ஆக. 2---

இடதுசாரி, ஜனநாயகக், கட்சிகள் தங்களுக்கிடையே அடிப்படைப் பிரச்சினைகளில் மாறுபட்ட கருத்துக்களைக் கொண்டிருந்தாலும்கூட-மக்களின் அவசரமான உடனடிப் பிரச்சினைகளில் ஒன்றுபட்டு செயலாற்ற வேண்டுமென்றும்-மாறுபட்ட கருத்துக்களை சகோதர முறையில் விவாதிப்பார்களேயானல், அநேக பிரச்னைகளில் பொதுவான முடிவுக்கு வருவது சாத்தியம் என்றும்-இந்த முறையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி நாட்டிலுள்ள சகல இடதுசாரி ஜனநாயக இயக்கத்தைக் கட்டிவளர்க்கப் பாடுபடுமென்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டி ஓர் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

1973 ஜூலை 15 முதல் 20-ம் தேதி முடிய, கல்கத்தாவில் கூடிய இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் (மார்க்சிஸ்ட்) மத்தியகமிட்டிக் கூட்டம் நடைபெற்றது.

1967-ம் ஆண்டில் நடைபெற்ற நாலாவது பொதுத் தேர்தலின்போது, பல்வேறு மாநிலங்களில் காங்கிரஸை முறியடிப்பதில் முக்கிய பங்கு வகித்துவிட்டு—அப்புறம 1969-ம் ஆண்டில் காங்கிரஸ் கட்சி பிளவுபட்டுப் போன பிறகு சீர்குலைக்கப் பட்ட இடதுசாரி, ஜனநாயக சக்திகளெல்லாம், மீண்டும் ஒன்று சேருவதற்கு தீவிரசிரத்தை எடுத்துககொள்ளுமாறு மத்தியக் கமிட்டி வேண்டுகோள் விடுததுள்ளது

### மேலும் பெரிய நெருக்கடி முற்றுது

காங்கிரஸ் கட்சி பிளவு பட்டதைபடுத்து, வலது கம்யூனிஸ்ட் கட்சியும், மற்றும் பல இடதுசாரிக் கட்சிகளும், குழுக்களும் மேற்கொண்ட நிலையானது சரியல்ல என்பதையே, கடந்த நாலு வருட நாட்டு நடப்புகள் இம்மியுா ஐயத்திற்கிடமின்றி மெய்ப்பித்து விட்டது. பிளவு படாத காங்கிரஸ், ஏகபோகங்களையும், நிலப்பிரபுக்களையும் பலப்படுத்தக் கூடிய கொள்கைகளைக் கடைப்பிடித்து வந்தது.

அந்தக் காங்கிரஸ் கடைப்பிடித்து வந்த அனைத்துக் கொள்கைகளையும் முன் கொண்டு செல்லும் சரியான வாரிசு, இந்திராகாந்தியைத் தலைவராகக் கொண்ட ஆளும் காங்கிரஸ் தான் என்ற உண்மையை, கண்ணுள்ளோர் அனைவருமே கண்டுகொண்டு விட்டனர். நாலாவது பொதுத் தேர்தலின்போது. நாட்டில் எப்படிப்பட்ட நெருக்கடி இருந்ததோ, அதைககாட்டிலும் பெரிதான சர்வாம்ச நெருக்கடி இன்றைய தினம் ஏற்பட்டிருக்கிறது.

அனைத்து அவசியப் பண்டங்களின் விலைவாசியும் என்றும் கண்டிராத அளவுக்கு ஏறிவிட்டது; அனேக இடங்களில் பட்டினிச்சாவுகள்ஏற்படும் அளவுக்கு, நாட்டின் பெரும் பாகத்தை பஞ்சம் வாட்டிக் கொண்டிருக்கிறது.

நாடு முழுவதிலும் லட்சோப லட்சக் கணக்கான மக்கள் வேலையில்லாமல் திண்டாடிக் கொண்டிருக்கிருர்கள்; வரிச்சுமைகளோ மென்மேலும் அதிகரித்துக் கொண்டேயிருக்கின்றன திட்டத்தில் ஏற்பட்டுள்ள பல்வேறு நெருக்கடிகளும் மீண்டும் திட்டத்துக்கு விடுமுறை கொடுக்க வேண்டிய நிலைமையைமுன்னுக்கு தள்ளி விட்டிருக்கிறது;

மேலேகூறியஇவையனைத்தும் நாட்டின் பொருளாதாரத்தில் மிகமிகத் தீவிரமான நெருக்கடி சற்று ஏற்பட்டுள்ளதஎன்பதின் அறிகுறிகளாகவே உள்ளன. பொருளாதாரத்தில் ஏற்பட்டுள்ள இந்த தீவிர நெருக்கடியுடன் கூடவே சமூக வாழ்விலும் அரசாங்க நிருவாகம் முழுவதிலும் புரையோடிக் கிடக்கும் ஊழலும் சேர்ந்துவிட்டது.

அத்துடன், சகல ஜனநாயக ஸ்தாபனங்களும், இயக்கங்களும் கொடிய அடக்குமுறைக்குப் பலியாகின்றன. அப்பட்டமான சந்தர்ப்பவாதமும், அதிகாரத்தைக் கைப்பற்றநடக்கும் போட்டா போட்டியும் ஆளும் கட்சிக்குள் கோஷ்டிச் சண்டைகளை பெருக்கி விட்டன. இதையடுத்து, மாநிலங்கள்தோறும், மந்திரி சபை நெருக்கடிகள் ஏற்பட்டுள்ளன. ஆளும கட்சியின் நெருக்கடியைத் தவிர்ப்பதற்கான ஒரு வழிமுறையாக ஜனதிபதிஆட்சியை புகுத்துகிருர்கள். இதுபோன்ற பலவேறு நிகழ்ச்சிகளும் நடந்து கொண்டிருக்கின்றன.

(4-ம் பக்கம் பார்க்க)

# கருணாநிதியின் பேச்சு

## தி.மு.க.ரவுடி கும்பலுக்குஊக்கமூட்டுவதாகும்

### சென்னை மாவட்ட மார்க்சிஸ்ட் கட்சி செயற்குழு கண்டனம்

சென்னை, ஆக, 3--

பிரதாப்சந்திரன் சம்பவத்தையும், தோழர் வி. பி. சிந்தன்மீது திமுகவினர்நடத்தியுள்ள திட்டமிட்ட தாக்குதலையும் ஒப்பிட்டு முதலமைச்சர் பேசிவருவதானது அவரது கட்சியின ரவுடிக் கும்பலுக்கு ஆககமும்-ஊக்கமும் அளிப்பதாகும என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னை—செங்கை மாவட்ட செயற்குழு கண்டனம் தெரிவித்துள்ளது. இதுபற்றி வெளியிட்டுள்ள அறிக்கை வருவாறு:—

தோழர் வி.பி சிந்தன்மீது நடந்த கொலைத் தாக்குதலையும், பிரதாப்சந்திரன் சம்பவத்தையும் ஒப்பிட்டு முதலமைச்சர்கருணாநிதி நேற்று பத்திரிகையாளா கூட்டத்தில் பேசியுள்ளதை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கடுமையாக ஆட்சேபிக்கிறது.

சிம்சன்தொழிற்சாலையில் தொழிலாளர்களிடையே நடந்த கோஷ்டிச் சண்டையில் ஒரு கோஷ்டிக்கு தலைமைதாங்கிய பிரதாப்சந்திரன் ஆயிரக் கணக்கான தொழிலாளர்களின் ஆத்திரத்திற்கு பலியானர்என்பது அனைவரும் அறிந்ததே.

### திட்டமிட்மிட்ட தாக்குதல்

ஆனல் தோழர் விபி சிந்தன் 35 ஆண்டுகளுக்கு மேலாக பொது வாழ்க்கையில ஈடுபட்டு பெரும தியாகம் செய்து தமிழகத்திலும், நாடு முழுவதும் தொழிலாளர், விவசாயிகள், மத்திய தர வர்க்கத்தினர் முதலிய வாழ்க்கையின் பல்வேறு துறைகளைச் சார்ந்த லட்சக் கணக்கான மக்களின் அன்பையும், மதிப்பையும் பெற்றவர். தமிழகத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் முக்கியத் தலைவர்களில் ஒருவர்.

இத்தகைய தலைவரைக் கொலை செய்யத் திட்டமிட்டு அவர் தனியாக பஸ்சில் செல்லும்போது 20க்கு மேற்பட்டவர்கள் கூடி தாக்கியுள்ளனர்.

### தி.மு.க.வின் அரசியல் நாகரிகம்

இந்த இரண்டு நிகழ்ச்சிகளையும் ஒப்பிட்டு முதலமைச்சர் கருணாநிதி பேசியுள்ளது அரசியல்நாகரீகத்திற்குப் புறம்பானது.

தோழர் சிந்தன்மீது நடந்த கொலைவெறித் தாக்குதலை நியாயப்படுத்தும் கேவலமான முயற்சி, முதலமைச்சரின் கட்சியைச் சார்ந்த ரவுடிக்கும்பலுக்கு ஊக்கமூட்டும பேச்சு.

இதை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னை—செங்கை மாவட்ட செயற்குழு வன்மையாக ஆட்சேபிக்கிறது.

சிந்தனை தாக்கியவர்கள் மீது தயவுதாட்சண்யமின்றி போலீசார் நடவடிக்கை எடுத்து வருவதாக முதலமைச்சர் கூறிபிருப்பது வெறும் கண்துடைப்பு.

### அரசு மறுப்பதன் அர்த்தமென்ன?

20-க்கு மேற்பட்டவர்கள் சேர்ந்து தோழர் சிந்தனை தாக்கியுள்ளனர். ஆனல் இதுவரை 6 பேர்களைத்தான் கைது செய்துள்ளனர். திட்டமிட்டுத் தாக்குதல் நடத்தியவர்கள் அனைவரையும் கைது செய்து சதி வழக்குத் தொடுக்க திமுக அரசு மறுக்கிறது.

ஆனல் சிம்சன் தொழிற்சாலையில் பிரதாப்சந்திரன் இறந்ததை காரணம் காட்டி நூற்றுக் கணக்கானவர்களைக் கைதுசெய்தனர். ஸ்தலத்திலில்லாத தோழர் குசேலரை முதல் குற்றவாளியாக்கி சதி வழக்குத் தொடுத்துள்ளனர்.

இந்த வழக்கில் மட்டும் தோழர் சிந்தன் அடையாளம் காட்டுகிறவர்கள்மீது மட்டும் வழக்குத்தொடுப்பது என்கிற முறையில் போலீசார் விசாரணையை நடத்தி வருகிருர்கள்.

### சதி வழக்கு தொடுக்கவும்

தோழர் வி பி. சிந்தனல் அடையாளம் காட்டமுடியாத, இந்தத் தாக்குதலில் ஈடுபட்ட திமுக வினரை தப்பிப்பதற்காக வேண்டுமென்றே போலீசார் இந்த முறையில் வழக்கு விசாரணையை நடத்துகிருர்கள். ஆகவே, இந்தக் கேலிக் கூத்தான அடையாளம் காட்டும் நிகழ்ச்சியில் பங்கு கொள்ள வேண்டாமென்று மார்க்சிஸ்ட் கட்சியின் மாவட்ட செயற்குழுதோழர் சிந்தனுக்கு ஆலோசனை கூறியுள்ளது.

போலீசார் இந்தவழக்கை நடத்தும் முறையை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கடுமையாக ஆட்சேபிக்கிறது.

சதித் திட்டம் தீட்டியவர்கள் அனைவரையும் கைது செய்து சதி வழக்குத் தொடுக்க வேண்டுமென்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கோருகிறது.

### கம்போடியாவில் விடுதலை படையின் முன்னேற்றம் பொம்மை அரசு கலக்கம்

நாம் பென், ஆக. 2—

கம்போடியாவில் பொமமை அரசை எதிர்த்து விடுதலைப் படையினர் கொடுக்கும் மரண அடி தென்வியட் நாம் பொம்மை அரசின் அடிவயிற்றை கலக்கியுள்ளது.

கம்போடியாவின் தலைநகரான நாம் பென்னைச் சுற்றி விடுதலைப்படையின் தாக்குதல் கடுமையாகி வருகிறது இதனல், நாம்பென் விடுதலைப் படையினல் கைப்பற்றப் படுமானல் அதனை மீடக, தான் படைகளை அனுப்பப் போவதாக தென் வியட்நாம் பொம்மை அரசின் ஜனதிபதி தியூ உளறியுள்ளார்.

நாம்பென் விடுதலைப் படையின் கையில் விழாதபடி பாதுகாப்பதில்தான் தெற்கு வியட்நாமின் பாதுகாப்பு இருப்பதாக ஒரு அதிகாரி தெரிவித்துள்ளார்.

## வயிறைவிட வலிமை பெற்ற ராணுவம்உண்டா?

மக்களுக்கு 12 அவுன்ஸ் உணவு தானியம் தேவை என்று போராட்டம் நடத்தும் பொழுது ராணுவத்தை அழைப்பேன் என்று அச்சுதமேனன் பயமுறுத்துகிருர்.

மக்களுக்கு போராடுவதற்கு உரிமை உண்டு; ராணுவத்தை அழைப்பேன் என்று பயமுறுத்த வேண்டாம். அச்சுத மேனனை உட்கார வேண்டிய இடத்தில் உட்கார வைக்கவும், இறக்கி விட வேண்டிய இடத்தில் இறக்கி விடவும் மக்களுக்கு முடியும்.

பசித்த வயிறைவிட வலிமை பெற்ற ராணுவம் எங்கே இருக்கிறது?

— தோழர் இ. எம். எஸ்.

— 27—7—73 திருவனந்தபுரம் பேச்சு.

## விலைவாசி உயர்வுக்கு காரணமான

★ கள்ள மார்க்கெட் கழுகுகளைப் பிடி
★ கருப்புப் பணத்தை ஒழித்திடுக
★ நிலப்பிரபுக்களிடம் கட்டாயக் கொள்முதல் செய்க ★ பற்றுக்குறைக்கு நோட்டு அச்சடிக்காதே ★ ஏகபோக முதலாளிகளின் சொத்துக்களை தேசிய மயமாக்குக

## மத்திய - மாநில அரசுகளின் கொள்கைகளை எதிர்த்து

# ஆக. 12-ல் மார்க்சிஸ்ட் கட்சி உள்ளிட்ட தோழமைக் கட்சிகளின் பேரணி இன்றிருந்தே தயாராகுக!

தீக்கதிர்

# கிராமப்புற உழைப்பாளிக்கு தி. மு. க. ஆட்சி வழங்கும் நீதி

ஆட்டுக் கிடைக்கு நரியை காவல் வைப்பதுண்டா? பாலுக்கு பூனையை பாதுகாப்பாக வைப்பார்களா? தேளுக்கு மணியம் கொடுத்தால் என்ன ஆகும்?

அதுதான் நடந்துள்ளது. தி. மு. க. அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட விவசாயத் தொழிலாளிகளின் குறைந்தபட்ச கூலி நிர்ணயக்குழு தீர்ப்பின்மூலம்,

இந்தக் குழுவை நியமித்த அன்றைக்கே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும், தமிழ்நாடு விவசாயத் தொழிலாளர் சங்கமும் எச்சரித்தது.

இது நிலச்சுவான்தார்களின் நலனை பாதுகாப்பதற்காக நியமிக்கப்பட்ட குழு என்றும் இதில் அங்கம்பெறும் நிலச்சுவான்தார்களின் எண்ணிக்கையைக் கொண்டும், அரசாங்கத்தின் போக்கைக்கொண்டும் நாம் எச்சரித்தது இன்று உண்மையாகிவிட்டது.

விவசாயத் தொழிலாளர் குறைந்தபட்ச கூலி நிர்ணய குழு ஏகமனதாக இந்த தீர்ப்பை வழங்கியதாக அமைச்சர் கூறுகிறார் விவசாயத் தொழிலாளிகளுக்கு மாபெரும் துரோகம் புரிந்துள்ள தீர்ப்பிற்கு வலது கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து தமிழ்நாடு கம்யூனிஸ்ட் கட்சிக்கு மாறியுள்ள ஏ. கே. சுப்பையாவும் ஒப்புதல் தெரிவித்திருக்கிறார். தி. மு. க. வுக்கு செவை செய்யப் போயிருக்கிற இந்த நபர் நிலச்சுவான்தார்களின் நண்பனாக மாறியிருப்பதில் ஆச்சரியமில்லை.

குறைந்தபட்ச கூலி நிர்ணயக் குழு மாடுகள் வைத்துக்கொண்டு பணியாற்றும் தொழிலாளர்களுக்கு கூலி நாள் ஒன்றுக்கு ரூ 5.50என்று நிர்ணயித்துள்ளது மாடு இல்லாமல் தானே பாடாக உழைக்கும் தொழிலாளிக்கு ரூ 3 கூலியாக நிர்ணயித்துள்ளது. பெண்களுக்கு ரூ. 1-75தான்

தமிழ்நாட்டில் கிராமப்புறங்களில் நடைமுறையில் நிலவும் கூலி விகிதங்கள் மேற்கூறிய கூலி நிர்ணயத்தின் விகிதங்களைவிட அதிகமாகவே உள்ளது.

கோவை மாவட்ட பேரூர் வட்டாரத்தில் மாடு இல்லாது உழைக்கும் தொழிலாளிக்கு ரூ. 5-50 வீதம் இப்போதே கூலி கிடைக்கிறது. பெண்களுக்கு ரூ. 3 வரை கிடைக்கிறது.

மதுரையிலும், ராமநாதபுரத்திலும் சில இடங்களில் மாடு வைத்துக்கொண்டு உழைக்கும் தொழிலாளிக்கு ரூ 7-லிருந்து 10 வரை கூலி கிடைக்கிறது. இங்கும் பெண்களுக்கு ரூ 3 கூலி கிடைக்கும் இடங்களும் பல உண்டு.

தஞ்சை வட்டாரத்தில் நீண்ட நெடும் போராட்டங்களுக்குப்பின் இக்குழு அளித்த தீர்ப்புக்கும் அதிகமாகவே எல்லாவிடங்களிலும் கூலி விகிதங்கள் உள்ளன. ரத்தம் சிந்தி உயிரைப் பலிகொடுத்து வீரத்துடன் பன்னெடுங் காலமாக போராடியதின் விளைவு இது இதவும் போதாதென்று அங்கு விவசாயத் தொழிலாளர்கள் போராடிக் கொண்டிருக்கின்றனர்.

பெருவாரியான இடங்களில் இந்தச் சம்பள விகிதம் தரப்படவில்லை என்ற உண்மை, மேற்கூறிய குழுவுக்கு தெரிந்திருந்தும் சமுதாய நீதியை கருதியாவது மேற்கூறிய சம்பள விகிதத்தை ஏனைய விவசாயத் தொழிலாளிகளுக்கும் கிடைக்கச்செய்ய குழு முன்வந்ததா? இல்லை.

மாறாக, 1969-ம் ஆண்டில் குறைந்தபட்ச சம்பளச் சட்டப்படி, தமிழ்நாட்டில் விவசாயத் தொழிலாளர்களுக்கு ரூ. 1—25 வழங்கியது என்றும் இன்று (1973-ல்) ரூ. 3 வழங்கி தீர்ப்புக் கூறுவதாகவும் டமாரம் அடிக்கிறது

1969-ல் இதே திமுக அரசால் நிர்ணயிக்கப்பட்ட சம்பள விகிதம் அநீதியானது, ஒரு தலைப்பட்சமானது என்றும் அன்றைக்கே விவசாயத் தொழிலாளிக்கு ரூ 3 கூலியாக கிடைத்துவந்தது என்றும் மார்க்சிஸ்ட் கட்சியும், தமிழ்நாடு விவசாயத் தொழிலாளர் சங்கமும் கண்டனம் முழங்கிவந்தன,

தமிழகத்தில் உணவு உற்பத்தியின் மூலாதார சக்தியாக விளங்கும் சுமார் 44 லட்சம் விவசாயத் தொழிலாளர்களைபற்றி திமுக அரசு எத்தகைய பார்வையினைக் கொண்டுள்ளது என்பதை அறிய அன்றையகூலி நிர்ணயிப்பும் இன்றைய நிர்ணயிப்பும் தக்க சான்றுகளாகும்.

1969 ம் வருஷத்திய அரசாங்க புள்ளி விவரத்தின்படியே மொத்த விலைகளைக் குறிக்கும் புள்ளி 210 ஆக இருந்தது. இன்று 1973-மே மாதத்திய புள்ளிவிபரம் என்ன? 277.

1969—ம் வருஷத்தில் அரசாங்கக் கணக்கின்படியே ஒரு ரூபாயின் மதிப்பு 50 காசு இன்று 36 காசைவிட கீழே போய்விட்டது என்று கணக்கு அறிவிக்கின்றனர். மேற்கூறியவை அரசாங்கத்தின் புள்ளி விபரங்கள். ஆனால் உண்மையென்ன?

சென்ற ஓராண்டில் மட்டும் 30 சதவிதத்திற்கு மேல் விலைவாசி உயர்ந்துள்ளன. அரிசி சென்ற ஆண்டைவிட 1 ரூபாய்க்கு மேல் அதிகரித்துள்ளது இந்த இடத்தில் கேரளத்தின் விலையை குறிப்பிடவில்லை இந்த நிலைமையில் விலைவாசிகளும் பயங்கரமாக உயர்ந்து ரூபாயின் மதிப்பும் படுவீழ்ச்சியடைந்துள்ள நிலைமையில், ரூபாயின் எண்ணிக்கையில் தொழிலாளியின் கூலியை நிர்ணயிப்பதே தொழிலாளி வர்க்கத்தை ஏமாற்றும் மாபெரும் மோசடியாகும்.

சென்ற ஆண்டு ரூ 3. சம்பளம்வாங்கிய விவசாயத் தொழிலாளிக்கு இந்த ஆண்டு ரூ5-கிடைத்தாலும் போதாது எனினும், தமிழ்நாடு விவசாயத் தொழிலாளர்கள் சங்கம் குறைந்தபட்சம் ரூ 5-வது சம்பளமாக வழங்க வேண்டும் என்று கோரியது. ஆனால், திமுக அரசும் அதனால் நியமிக்கப்பட்ட மிராசுதார்கள் நிரம்பிய கூலி நிர்ணயக் குழுவும் இந்நியாயமான கோரிக்கையை ஏக மறுத்து விட்டனர்.

விவசாயத் தொழிலாளர்கள் என்பவர்கள் சமுதாயத்திலே மிக மிக கொடிய சுரண்டலுக்கு உள்ளாகியிருக்கும் மனித ஜீவன்கள். அவர்களுடைய வேலைக்கு உத்திரவாதமில்லை. சம்பளத்தை நிர்ணயித்து விட்டதாக கூறும் அரசு, ஆண்டும் முழுவதும் அவர்கள் வேலை செய்வதற்கான எந்த ஏற்பாட்டையும் செய்யவில்லை. வருடத்தில் 120 லிருந்து 160 நாட்கள் தான் வேலை.

இந்த நாட்களில் சம்பாதிக்கும்கூலியைக்கொண்டு தான் 365 நாட்களும் உயிர் வாழ வேண்டும்.

இத்தகைய கொடுமையான நிராதரவான நிலைமையைச் செப்பனிட இந்திராசோசலிசத்திலும், கருணாநிதியின் திராவிட பூங்காவிலும் எந்த ஏற்பாடும் இல்லை என்பது உலகமறிந்த விஷயம்.

எனினும் நேர்மையான சம்பள விகிதங்களை கூட நிர்ணயிக்க இந்த ஆட்சி தயாராக இல்லை. காரணம் இவர்கள் நிலச்சுவான்தார்களின் நண்பர்கள். கொள்ளைக்காரர்களுக்கு துணை நிற்பவர்கள்.

இந்த உண்மையை, தங்களது நியாயமான கூலிக்காக போராடும் தொழிலாளர்கள் நடைமுறையில் உணர்வார்கள்.

இந்திராவின் கருணாநிதியின் போலீசும், குண்டர்களும், நிலச்சுவான்தார்களின் அடியாட்களும் பல வெண்மணிகளை உருவாக்கி புதிய வரலாறு படைத்திருக்கிறார்கள்.

விவசாயத் தொழிலாளிகளுக்கு நியாயக் கூலியை வழங்கவில்லை. நிலப்பிரபுத்துவத்தின் கொடிய சுரண்டலுக்குதான் நியாயம் கற்பித்துள்ளது இந்த விவசாயத் தொழிலாளர்களின் கூலி நிர்ணயக்குழு. இதுதான் திமுக ஆட்சி கிராமப்புற உழைக்கும் மக்களுக்கு வழங்கும் நீதி.

# "ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம்" எனும் உன்னதக் கொள்கை அமைச்சர்களால் உடைக்கப்படுவதா?

## ஆசிரியர் கூட்டணி மாநில தலைவர் வருத்தம்

மதுரை, ஆக —

"தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணி என்ற ஆசிரியர்களின் சக்தி வாய்ந்த ஒரே அமைப்பிற்கு-மாற்று அமைப்பை தோற்றுவித்து அதற்கு ஆக்கம் காட்டுவன் முலம் 'ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம்' என்ற உன்னதக் கொள்கை அமைச்சர் பெருமக்களால் உடைக்கப்படுகிறதா?" என ஆசிரியர் கூட்டணி மாநிலத் தலைவர் ஜே. எஸ் இராசு வருத்தம் தெரிவித்தார்.

மேலும் அவர் கூறியதாவது:

### ஆசிரியர் கூட்டணி அரசியல் சார்பற்றது

1946-ல் தொடங்கப்பட்ட ஆசிரியர் கூட்டணி அரசியல் கட்சி சார்பற்றது. பல்வேறு நிறுவனங்களின் கீழ் பணியாற்றும ஆசிரிய பெருமக்களில் ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் பேருக்கு மேற்பட்டவர்கள் இதில் உள்ளனர்.

### கழக ஆட்சியில் ஆசிரியர் கூட்டணி

1969ல் சென்னையில் கோரிக்கை மகாநாடுநடத்தி 7 அம்ச கோரிக்கையை வைத்த போது பத்தாயிரம் பேர் சென்னைக்கு சைக்கிளிலும், ஐம்பதாயிரம் பேர் மாநாட்டிலும் கலந்து கொண்டனர்,

1970ல் மதுரையில் நடைபெற்ற இராமுண்ணி மணிவிழா மாநாட்டிற்கு மாநகரமே கண்டிராத அளவு ஊர்வலம் நடத்தி ஒரு லட் பேர் கலந்து கொண்டனர்.

1973ல் கோவையில் வெள்ளி விழா மாநாடு நடத்தி ஒரு லட்சத்துக்கு மேற்பட்டவர்கள் கலந்து கொண்டதை நாடே அறியும்.

இவ்வளவு பெரிய மாநாட்டில் தமிழக அமைச்சர்கள் கலந்து கொள்ள ஒப்புக் கொண்டு பின்னர் கலந்து கொள்ளவில்லை.

### இந்தியாவிலேயே பெரிய அமைப்பு

இந்தியாவில் பல்வேறு மாநிலங்களில் தொடக்கப் பள்ளி ஆசிரியர் அமைப்புகளில் ஆசிரியர் கூட்டணி மிகப் பெரியது. இந்தியாவிலேயே முதன் முதலாக தங்களது உரிமைக்காக அமைதியான போராட்டம் நடத்தி ஆயிரத்து இருபது பேர் 1972 மே மாதத்தில் சிறைக்கு அனுப்புகின்ற அளவுக்கு வலுவானது.

### ஆசிரியர் நலனில் அக்கறைகொண்ட அமைப்பு

இந்த இயக்கம் தொடக்கப்பள்ளி ஆசிரியர்களின் முன்னேற்றத்திற்கும், நல்வாழ்விற்கும் பாடுபட்டு அரிய பெரிய சாதனைகளை செய்தது தாழ்ந்த நிலையில் ஒதுக்கப்பட்டவர்களாக இருந்த ஆரம்ப ஆசிரியர்களை உணர்வூட்டி—தட்டியெழுப்பி தனது உரிமைக்கும்—உயர்வுக்கும் போராடுகின்ற சக்தி வாய்ந்த இனமாக உருவாக்கியுள்ளது.

### கட்சிக் கண்ணோட்டமில்லாத நடவடிக்கை

அன்று முதல் இன்று வரை ஆசிரியர் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளில் அரசின் கவனத்தைப் பெற பல்வேறு நடவடிக்கைகளை நடத்தியுள்ளது எந்த நேரத்தில் எது தேவையோ அதை முடிவு எடுத்து எந்தக்கட்சி ஆட்சிப் பொறுப்பில இருந்தாலும் கட்சிக் கண்ணோட்டமின்றி நடவடிக்கைகளை செயல்படுத்தியுள்ளது.

### ஆளுங்கட்சியினர் கோபம்

ஆசிரியர் கூட்டணியின் வளர்ச்சியையும் அதன் பின்னணியில் உள்ள சக்தியையும் கண்ட நகராட்சி, மாநகராட்சி, ஊராட்சி ஒன்றியம் இவற்றில் பொறுப்பேற்றுள்ள ஆளுங்கட்சியினர் அவர்கள் நிர்வாகங்களில் ஏற்படும் குறைபாடுகளைத் தீர்த்திட ஆசிரியர்கூட்டணி தீவிரமாக செயல்பட்ட போது அது அவர்களின் ஏகபோக சர்வாதிகாரத்திற்கு முரண்பட்ட வழிகளில் இருந்து விட்டதனாலும் நிர்வாகத்தில் உள்ள ஊழல்களை வெளிப்படுத்துகின்ற வழியில் அமைந்து விட்டதனாலும் வெறுப்படைந்து கோபமுற்றனர்.

### ஆசிரியர் கூட்டணியை ஒடுக்கிடும் நடவடிக்கை

அப்படிப்பட்டவர்கள் ஆளும் வர்க்கத்தினர் சிந்தனையில் இந்த இயக்கத்தினை அடக்கி ஒடுக்கிட எண்ணினர் ஆளுங்கட்சித் தலைமையிடம் பொல்லாதவற்றைக்கூறி பொய்யான பின்னணியை உருவகப்படுத்தி ஆசிரியர் கூட்டணியை உடைத்திடும் வேலையில் தீவிரமாக ஈடுபட்டனர். இதற்கு ஆளுங்கட்சி சட்டமன்ற நாடாளுமன்ற உறுப்பினர்கள் அமைச்சர் பெருமக்கள் துணை நின்றனர்.

### ஆசிரியர் கூட்டணிக்கு மாற்று இயக்கம்

ஆசிரியர்களில் உள்ள சில கொள்கையற்ற சந்தர்ப்பவாதிகளுக்கு ஊக்கமும், ஆக்கமும் காட்டி—ஆசை வார்த்தைகளை ஊட்டி—சொந்தக் சலுகைகளைத் தந்து போட்டி அமைப்பை உருவாக்க தயார் செய்தனர்-

ஆளுங்கட்சி சார்புடைய போட்டி அமைப்புகள் மூன்றினை — ஆசிரியர் கழகம்' முன்னேற்றக் கூட்டணி, முன்னணி--என்ற பெயரில் தோற்றுவித்தனர்.

இதில் ஆசிரியர்களை சேரும்படி அதிகாரிகள் வழியில் நிர்ப்பந்தம் தந்தனர். நெருக்கடி தந்தனர். போட்டி சங்கத்திற்கு ஆதரவு தரவில்லையெனில் துன்பப்பட நேரிடும் என ஆசிரியர்கள் —அப்படிப்பட்டவர்களால் மிரட்டப்படுகின்றனர்.

அவர்களின் ஆணவப் பேச்சுகளுக்கும் — அதிகார மிரட்டலுக்கும் — ஆசிரியர் கூட்டணியின்பால் கொண்டுள்ள பற்றுக்கும் இடையே ஆசிரியர்கள் நித்தம்-வெந்துநொந்து இருதலைக் கொள்ளி எறும்பு போல் துடிக்கின்றனர்.

ஆசிரியப் பெருமக்கள் ஆசிரியர் கூட்டணியில் அரசியலுக்கு அப்பாற்பட்ட நிலையில பங்கு பெறுகின்றனர். ஆசிரியர் கூட்டணியும் இதுவரும் ஆசிரியர்களை எந்த ஓர் குறிப்பிட்ட கட்சி வழியில நடத்தி வந்ததும் இல்லை, இனியும் நடத்தப் போவதுமில்லை.

### இணைப்பு மாநாடு

ஆசிரியர் கூட்டணிக்கு எதிராக ஓர் மாற்று அமைப்பை உண்டாக்கும் மனப்பான்மையில் சிறிய மூன்று அமைப்புகளை இணைப்பதில் தீவிரம் காட்டப்பட்டு அதற்கு அமைச்சர் பெருமக்களும் ஆக்கமும், ஊக்கமும காட்டுகின்றனர். அதனடிப் படையில்தான் மாநில இணைப்பு மாநாடு கூட்டப்பட்டுள்ளது.

### நிதி வசூல்—நிர்ப்பந்தம்

ஆளுங்கட்சியினரும், நிர்வாக அதிகாரிகளும் தீவிரமாக இம்மாநாட்டிற்கு ஆதரவாக செயல்படுகின்றனர். அதிக விளம்பரம் செய்யப்படுகிறது. மாநாட்டு நிதி வசூலை கட்சிக்காரர்களே நேரடியாக வசூல் செய்கின்றனர். பல்வேறு வழிகளில் நிதி திரட்டப்படுகிறது போட்டி சங்க மாநாட்டிற்கு ஆசிரியர்களைப் புறப்படக் கட்டாயமாக நிர்ப்பந்திக்கப்படுகின்றனர். போகவில்லையெனில் பல தொல்லைக்கு ஆளாக நேரிடும் என மிரட்டுகின்றனர்.

### இலவச—பஸ்வசதிகள்

மற்றொரு புறம் ஆசிரியர் கூட்டணி இணைவதால் பொய் வதந்தியைப் பரப்பியுள்ளனர். ஆசிரியர் கூட்டணியில் உள்ளவர்களை ஏமாற்றிட பொய்ப்பிரச்சாரம் செய்யப்படுகிறது. மாநாட்டிற்கு பஸ்ஸில் இலவசமாக அழைத்துச் செல்லப்படுவர் என்றும் அங்கு இலவச உணவு வழங்கப்படும் என்றும் ஆசைவார்த்தைக் கூறப்படுகிறது.

### ஆசிரியர்கள் பெயரில் கட்சிக்காரர்கள்

பல இடங்களில் ஆசிரியர் பலரும் வர மறுத்து விட்டதால் பஸ்களில் ஆசிரியர்கள் என்ற பானரில் ஆளும் கட்சிக்காரர்கள் பலரையும் அழைத்துச் செல்லப் போவதாகவும் தகவல் வந்துள்ளன.

### கட்சி அடிப்படையில் ஆசிரியர்கள் பிளவு படுத்தப் படுதல்

ஆசிரியர்கள்கட்சி அடிப்படையில் செயல்படுவது கூடாது என அமைச்சர் பெருமக்கள் பல்வேறு கூட்டங்களிலும், நிகழ்ச்சிகளிலும் பேசிவிட்டு இன்று அவர்களேகட்சி அடிப்படையில் ஆசிரியர்களை பிளவு படுத்துவது விந்தையாக உள்ளது.

ஆசிரியர் கூட்டணிக்கு போட்டி அமைப்பிற்கு ஆதரவு தருவதன் மூலம—அவர்களது மாநாட்டில் கலந்து கொள்வது மூலம், ஆசிரியர் கூட்டணிக்குப் பின்னணியில் உள்ள பல்லாயிரக் கணக்கான ஆசிரியர்களின் வெறுப்புணர்ச்சியைத் தேடிக்கொள்ள வேண்டிவரும். இது தமிழ்நாட்டில் துர்பாக்கிய நிலையே.

### ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம்

ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம என உன்னதமான கொள்கையைசட்டமன்றத்திலும், வெளியிலும் பேசி வரும் அமைச்சர் பெருமக்கள் ஆரம்ப ஆசிரியர்களின் ஒரே இயக்கமான ஆசிரியர் கூட்டணிக்குப் போட்டியான அமைப்பை வளர்க்க இணைப்பு மாநாடு நடத்தி அதற்கு ஊக்கமும் காட்டுவதன் மூலம அந்தக் கொள்கையை அவர்களே உடைப்பதாகும். இதன் மூலம் அரசுக்கும், ஆசிரியர்களுக்கும உள்ள நல்லுறவு கெட்டு அதிருப்தி வளரும் படியான தாக அமைந்திடப்போவது இவர்களுக்குப் புரியுமோ? இல்லையோ?

### வேண்டுகோள்

ஆசிரியர் கூட்டணி தனக்கே உரித்தான தனி வழியில் சற்றும் பிறழாமல் ஆசிரியர் நலனுக்கான வழிகளில்நடைபோடுகிறதுஎன்றும் ஆசிரியப் பெரு மக்கள் அறிந்து கட்சி அடிப்படையில் சிந்திக்காமல் ஆசிரியர்கள் என்ற நிலையில் நின்று என்றும்போல் இயக்கத்தின் வளர்ச்சிக்கும் ஒற்றுமைக்கும் உறு துணையாக இருந்து ஆசிரியர் ஒற்றுமை காத்திட அன்புடன் வேண்டுகிறேன்.

## ஆசிரியருக்கு...

### பொதுக்கூட்டத்துக்கு மின்சாரம் பெற தண்டத்தீர்வை கட்ட வேண்டிய அவல நிலை

ஐயா,

இராமநாதபுரம் நகரில் அரசியல்கட்சிகள் பொதுக் கூட்டம் நடத்தும் பிரதான இடம் அரண்மனை முன்புதான் உள்ளது பொதுக் கூட்டத்திற்கு ஒளி, ஒலி அமைக்கத் தேவையுள்ள மின்சாரம்பெற வேண்டுமென்றால், மின்சாரவாரியத்திற்கு 65 ரூபாய் கட்ட வேண்டும். அப்பொழுது தான் மின் இணைப்பு தரப்படுகிறது.

தமிழ்நாட்டில் இவ்வளவு பெரிய தொகை கட்டி மின்சாரம் எடுக்கும் நகரம் வேறு எங்கேயும் இல்லை.

இந்தத்தொகை கட்டினால் 25 ரூபாய் அளவில் அவர்கள் இஷ்டப்பட்ட சமயம் திருப்பித் தருவார்களாம். இதனால் அரசியல கட்சிகள் பெரும் சிரமப்பட வேண்டியுள்ளது.

மார்க்ஸிஸ்ட் கட்சியைப் பொறுத்தமட்டில் மக்களிடம் நன்கொடை வாங்கி செலவுகள் செய்யும் நிலையில் 65 ரூபாய் கட்டுவதென்பது சாத்தியமில்லை

ஒருபுறம் மின்சாரத் திருட்டுகளும், மறுபுறம் பெரு முதலாளிகளுக்கு மின் கட்டண சலுகையும் அளிக்கப்படும் திமுக ஆட்சியில், அதன் இராமநாதபுரம் இள மின்பொறியாளர் அரசியல் கட்சிகளிடம்வாங்கித்தான் கோட்டை கட்ட வேண்டுமென கருதுகிறார் போலும்.

5 மணி நேரம் மின்சாரம் செலவு செய்தால் 2 ரூபாய் கூட வராது அப்படியிருக்க இவ்வளவு பெரிய தொகை வசூலிப்பதா?

எனவே இராமநாதபுரம் மின்சார வாரியம்அரசியல் கட்சிகளின் வசதிக்காக சிறு தொகை வசூலித்து ஒளி, ஒலி வசதி செய்து தர வேண்டுகிறேன்.

இப்படிக்கு,
பி. எஸ். துளசிராமன்,
மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி,
தாலுகா செயலாளர்,
பரமக்குடி. இராமநாதபுரம்

## நடக்க இருப்பவை

ஆலங்குலம்
சிமெண்ட் ஆலை முன்பு
6—8—73-ந் தேதி
சிமெண்ட் தொழிலாளர்களின் சம்பள உயர்வு கோரிக்கை விளக்கபொதுக் கூட்டம்

தோழர்
கு. பாலவிநாயகம்
பேசுவர்.

# ஆளும் காங்கிரசும் அரசியல் சட்டமும்

1967-ம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலில், பல மாநிலங்களில் ஆளும் கட்சி—மண்ணைக் கவ்வியது அப்போது, எதிர்க் கட்சிகள், மாநிலங்களின் அரசு அமைக்க வந்தபோது, காங்கிரஸ்காரர்கள் சொன்னது என்ன?

யாரேனும் எதிர்க்கட்சித் தலைவர், முதல்மந்திரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் மட்டும் போதாது, அவரும் அவருடைய கூட்டணிக் கட்சிகளைச் சேர்ந்த சட்டமன்றத் தலைவர்களும், தீர்மானம் போட்டால் போதாது! கவர்னரின் முன்னால் அவர்கள் அத்தனை பேரையும் கொண்டு வந்து நிறுத்தினாலும் போதாது! ஏனென்றால், ஆட்சி, எதிர்க்கட்சியின் கைக்கு மாறிவிடும்! எதிர்க் கட்சியைச் சேர்ந்தவர், எவரானாலும், அவர் தனக்கு, பெரும்பான்மை இருப்பதாகக் கூறினால். அதனை ஏற்றுதுக் கொள்ள கவர்னர் மறுப்பார்! இது மேற்கு வங்கத்தில், பீகாரில், ராஜஸ்தானில், உத்திரப் பிரதேசத்தில் பல மாநிலங்களில் நடந்திருக்கிறது. ஆனால் சமீபத்தில், மிகப் பெரிய ஆச்சரியம் ஒன்று பாட்னாவில் நடந்துள்ளது.

பீகாரில், கோதார்பாண்டேயை,இறக்கி விட்டு புது முதல்வரைக் கொண்டுவர முயற்சி நடந்தது. சட்ட மன்ற உறுப்பினர்கள், கோஷ்டியாகப் பிரிந்து மண்டையை உடைத்துக்கொண்டதுதான் மிச்சம், காங்கிரஸ் உறுப்பினர்கள் தங்களுக்குள் ஒருதலைவரைத் தேர்ந்தெடுக்க, நடத்திய கூட்டத்தில் எந்தவித முடிவும் எடுக்க முடியவில்லை.

## இந்திரா ஆணையிட்டால்...

கடைசியில் முடிவை, பிரதமர் இந்திரா காந்திக்கு விட்டுவிடுவதாக தீர்மானித்தனர். பிரதமர் பீகார் தலைவர்களை டில்லிக்கு வரவழைத்தார். அவர்களிடம், அப்துல்கபூரை, நியமித்தார். மறுநாள் அப்துல்கபூர், பாட்னா வந்தார். வந்தவர் நேராக, ராஜபவனம் சென்று, பீகாரின் முதல் மந்திரியாக பிரமாணம் செய்விக்கப்பட்டார்.

அவரை சட்டசபைக் கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுத்ததாகக்கூட ஒரு தீர்மானம் கிடையாது.

காங்கிரஸ் கட்சிக்குள் தேர்தல் என்பது ஒரு வியாபாரம். வியாபாரம் வெளியிலேயே நடந்துவிட்டதால், சட்டசபைக் கட்சியின் தேர்தல் தீர்மானம் தேவையில்லை என்று கருதி விட்டார்கள் போல் தெரிகிறது!

பிரதமர் தீர்மானம் விட்டால், கவர்னரும் சரி—மற்றவர்களும் சரி—அதனைச் செய்ய வேண்டியது தானே; அவரும் காங்கிரஸ்காரர் தானே!

## கவர்னரின் கட்சிப்பற்று

தமிழ் நாட்டின் கவர்னர் கே கே ஷா டெல்லி சென்றபோது, குஜராத் மாநில காங்கிரஸ் உட்பூசலில், தலையிட்டார்! அவர் கவர்னராகி விட்டார் என்பதற்காக, தான் காங்கிரஸ்தான் என்பதை மறந்து, காங்கிரஸ் கட்சியின் வளர்ச்சிக்காகப் பாடுபடக் கூடாது என்பது சரியா?

நீதிபதிகளே காங்கிரஸ் கட்சிக்காக இருக்கும் கவர்னர்கள் மட்டும் சளைத்தவர்களா?

# விலைவாசி உயர்வை எதிர்த்துப் போராட பெண்கள் தயாராக வேண்டும்

## போடி மாதர்களிடையே தோழர் பாப்பா உமாநாத் அறைகூவல்

போடி, ஜூலை 2—

போடியில் கடந்த ஜூலை 28-ந் தேதி ஜனநாயக முற்போக்கு மாதர்கள் சங்கக் கூட்டம தோழர் ஆர். கஸ்தூரி தலைமையில் நடைபெற்றது. சங்கத்தில் நடைபெற்ற வேலை அறிக்கையை விளக்கி தோழர் பாக்கியம்மாள் பேசினார். கூட்டத்திற்கு நகரின்எல்லாப் பகுதிகளிலிருந்தும் ஏராளமான பெண்கள் கலந்து கொண்டார்கள்.

அக் கூட்டத்தில் தோழர் பாப்பா உமாநாத் பேசியதாவது:—

இன்று நாட்டு மக்களிடையே வேலையில்லாத் திண்டாட்டமும், விலைவாசி உயர்வும், தீர்க்க முடியாத ஒரு பிரச்சனையாகி நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே போகிறது. குடும்பப் பொறுப்பை ஏற்று நடத்தக் கூடிய பெண்கள் தான் இக் கொடுமைகளால் பெரிதும் பாதிக்கப்படுகிறார்கள். மக்கள் உபயோகிக்கும் அத்யாவசிய பண்டங்களான அரிசி, பருப்பு, எண்ணை, துணி போன்ற பொருள்களின் விலைகள் அதிகப்படியாக உயர்ந்து விட்டதால். பெரும்பாலான குடும்பங்கள் பசியும பட்டினியுமாக செத்து மடிந்து கொண்டிருக்கிறது. இதற்கெல்லாம் நம் தலைவிதி தான் காரணம் என்று பெண்கள் நினைக்கக் கூடாது. இக்கொடுமைகளுக்கு எல்லாம் மூலகாரணம் ஏழைமக்களை சுரண்டி பணக்காரர்களைக் கொழுக்க வைத்துக் கொண்டிருக்கும் இந்திரா, கருணாநிதி அரசுகள் தான் என்பதை உணர்ந்து மத்திய மாநில அரசுகளை எதிர்த்துப் போராட பெண்கள் தயாராக வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

கூட்டத்தில் முஸ்லீம் கோஷாப் பெண்களும், போடியிலிருந்து 19 மைல் தூரத்தில் 8000 அடிஉயரத்திலுள்ள கொழுக்குமலையிலுள்ள மாதர் சங்க உறுப்பினர்களும் வந்து கலந்து கொண்டார்கள்.

# சிவந்தியா புரத்தில் திண்டுக்கல் வெற்றி விழா

நெல்லை, ஜூலை. 31—

நெல்லை மாவட்டம் சிவந்தியாபுரத்தில் கடந்த 25-ம் தேதி திண்டுக்கல் வெற்றி விழாப் பொதுக் கூட்டம் நடைபெற்றது வேலுச்சாமி (அ தி மு க) தலைமைவகித்தார் மார்க்சிஸ்ட் சார்பில் தோழர்கள் பி சொரணமும், ஆண்டியும் அ தி மு க சார்பில் பிச்சையா, சங்கரன், செல்வராஜ், சுப்ரமணியம், கணேஷன் ஆகியோரும் வலது கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தளவாயும் பேசினர்.

தோழர் வி பி சிந்தனை தி மு க ரௌடிகள் தாக்கியதற்கு கண்டனம் தெரிவித்தனர்.

திண்டுக்கல் தேர்தலில் ஏற்பட்ட இடதுசாரி ஒற்றுமையே சிண்டிகேட், இண்டிகேட், தி மு க கட்சிகளுக்கு மரண அடி கொடுக்க முடியும். எனவே, அவ்வொற்றுமை தொடர்ந்து நீடிக்கவேண்டும் என்றும் பேசினர்.

போராடும் குமரி மாவட்ட மக்களுக்கு வாழ்த்து தெரிவித்தும், சிந்தன் தாக்கப்பட்டதைக் கண்டித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### ஆரணி பட்டு மில் தொழிலாளர் மீது

# போலீசாரின் கொடூரம்

## சிறுமியை அடித்து இம்சித்த கொடுமை

## செய்திகள் இருட்டடிப்பு

### தோழர் வே. கண்ணன் தரும் தகவல்

வேலூர், ஆக. 2—

**ஆரணிபட்டு மில் தொழிலாளர்கள் மீது கடந்த ஜுலை 18ம்தேதி, போலீசார் நடத்திய அடக்குமுறை குறித்து, வடஆர்காடு மாவட்ட சி. ஐ. டி. யூ. செயலாளரும், சம்மேளன பொதுச்செயலாளருமான தோழர் வே. கண்ணன் தரும் விபரங்கள் வருமாறு:**

கடந்த 18ந் தேதி மாலை வட ஆற்காடு மாவட்ட ஆரணியில் அமைதியான முறையில் 'தர்ணு' போராட்டம் நடத்திவந்த பட்டு முறுக்கு மில் பேக்டரி தொழிலாளர்கள் மீது போலீசார் கண்மூடிசதனமாக தாக்கியுள்ளனர் ஆரணி டவுன் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் கண்ணன் என்பவரின் தன்னிச்சையான உத்திரவினுல் சட்டத்திற்கு புறம்பாக எவ்வித முன் எச்சரிக்கையுமின்றிக் கொடூரமான முறையை போலீசார் நடத்தியுள்ளனர்.

இந்த சப்-இன்ஸ்பெக்டர் கண்ணன் என்பவர் ஒரு சில்க் முறுக்கு பேக்டரியின் முதலாளிக்கு உறவினர் என்று கூறப்படுகிறது. அதனுல், ஆரம்பத்திலிருந்தே முதலாளிகளுக்கு ஆதரவாக தொழிலாளாகளுக்கு விரோதமாகநடந்து வந்துள்ளார்.

#### காலையிலேயே கைது

18-ந் தேதி காலையிலேயே தொழிற்சங்க முக்கியஸ்தர்களான தோழர்கள் டி.ஆர். புருஷோத்தமன், ராமலிங்கம், பெருமாள், ஆஜா ஆகிய தோழர்களை கைது செய்தனர்.

முன்கூட்டியே சதித்திட்டம் போட்டுக்கொண்டு போலீஸ் லாரியையெடுத்துக் கொணடுவந்து, சமரசப் பேச்சு வார்த்தைக்கு, மாவட்ட ஆட்சித் தலைவர் டிட்டி போலீஸ் சூப்பிரெண்டெண்ட் வந்துள்ளதாகவும் போலீஸ் லாரியில் அழைத்துப் போவதாகவும் கூறி இந்தத் தோழர்களைக் கைது செய்துள்ளனர் போலீசார்.

ஆண் பெண் தொழிலாளர்கள கூட்டமாகசேர்ந்து ஆட்சேபித்து தலைவர்கள் வந்து பேசுவார்கள் நாங்கள் சமரச பேச்சுக்கு வரமுடியாதுஎன்று மறுத்துவிடவே, சப்-இன்ஸ்பெகடர்ஆத்திரத்துடன் போய்விட்டார்.

பின்னர் தர்ணு போராட்டம் நடத்துவதை நிறுத்தி வைத்து பேச்சுவார்த்தைக்கு வரவேண்டுமென்று கூறி, ஏராளமான போலீஸ் படையை வைத்துக் கொண்டு மிரட்டினுர். போலீஸ் படையை முதலில் வாபஸ் பெறச் செய்து தலைவர்கள் வரும வரை தர்ணு போராட்டம் ஒத்தி வைபபதாக கூறி அதன்படி ஒத்தி வைத்தார்கள் நம் தோழர்கள்.

#### சி ஐ டி யூ தலைவர்கள் சந்திப்பு

அதற்குப்பிறகு, வேலூரிலிருந்து தோழர்கள் கே. ஆர்.சுந்தரம், வே கண்ணன் ஆரணி போய்ச் சேர்ந்தார்கள் அங்கே முகாமிட்டிருந்த செய்யார் டிப்டி-போலீஸ் சூப்ரண்டெண்டை சந்தித்து, தொழிலாளர்கள் அமைதியாக தர்ணு போராட்டம் நடத்துவதைப்பற்றியும், முதலாளிகளின் சண்டித்தனத்தைப் பற்றியும் பேசிவிட்டு வந்தார்கள்.

அதன்படி 18-7-73 ந் தேதி மாலை அண்ணுமலை செட்டியார் என்பவரின் பட்டு முறுக்கு பேக்டரிக்கு முனுல, ஆண், பெண், தொழிலாளர்கள் அமைதியாக உட்கார்ந்துகொண்டு, போக்குவரத்துக்கு வழிவிட்டு எவ்வித இடையூறுமின்றி, கோஷம் போட்டுக்கொண்டு தர்ணு போராட்டம் நடத்திவந்தனர். அங்கு ஏராளமான ரிசர்வ்போலீஸ் படை குவிக்கப்பட்டிருந்தது.

#### சதித் திட்டம்

ஏற்கனவே சப்-இன்ஸ்பெக்டர் கண்ணனும், அண்ணுமலை செட்டியார் சில்க் முறுக்கு பேக்டரி முதலாளியும் சதித்திட்டம் போடடு, திட்டமிட்டபடி அமைதியாக தர்ணு போராட்டம் நடத்தி வந்த தொழிலாளர்கள்மீது மாடி மீதிருந்த முதலாளி ஆட்களை ஏவிவட்டு கல்லெறிந்தார்கள் இதனைப் போலீசார் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தனர் மாடி மீதிருந்து கல்லெறியும், முதலாளிமீதும அவரின ஆட்கள் மீதும் எவ்வித நடவடிக்கையும் எடுக்காமல் போலீசார் இருந்ததால், தொழிலாளர்கள் கோஷம் போட்டு போலீசாரை நடவடிக்கை எடுக்கக் கோரினுர்கள். சப்-இன்ஸ்பெக்டர் கண்ணன் ஆத்திரத்துடன் அண்ணுமலை செட்டியாரிடம், பேக்டரிக்குள் போய் முதலாளியிடம பேசிவிட்டு வந்தவுடனே எவ்வித முன் எச்சரிக்கையும் செய்யாமல் போலீஸ் படையுடன் கண்மூடித்தனமாக — கொடூரமாக தடியடி நடத்திஞர்கள்.

#### கொடூரமான தடியடியால் காயம்

அதனுல் ஆண், பெண் தொழிலாளர்களுக்கு படுகாயம் ஏற்பட்டுள்ளது ஒரு தொழிலாளிக்கு மண்டை உடைந்து ஆரணி வி. எஸ் ஐ.ஆஸ்பத்திரியில் சிகிச்சை அளித்துள்ளார்கள்.

ஒரு சிறுமியான பெண் தொழிலாளி, தொழில் தகராறில் போலீஸ் தலையிடாதே என்று கோஷம் போட்டதற்காககுறிவைத்து போலீஸ் தடியடியால் மோசமாக தாக்கப்பட்டு கவலைக்கிட்மாக இருக்கிருள்.

இவ்வளவு காட்டுமிராண்டித்தனமாக எதேச்சதிகாரமாக, தடியடி நடத்த சப்-இன்ஸ்பெக்டர் கண்ணன் உத்தரவிட்டு, நடத்தியுள்ளதை நான் வன்மையாகக் கண்டிக்கிறேன்.

உடனடியாக, தமிழ்நாடு முதலமைச்சரும், போலீஸ்-இன்ஸ்பெக்டர் ஜெனரலும், நடவடிக்கைகள் எடுத்து சப்-இன்ஸ்பெக்டர் கண்ணனை உடனே சஸ்பென்ட் செய்ய உத்தரவிட்டு, எதேச்சதிகாரமாக தடியடி நடத்த உத்தரவிட்டு, கொடுமை நடத்தியுள்ளது குறித்து பகிரங்க விசாரணை நடத்த வேண்டுமென்று கோருகிறேன்.

#### தோழர்கள் மீது வழக்கு

இவ்வளவு அக்கிரமமான தடியடி நடத்திவிட்டு, சப்-இன்ஸ்பெக்டர் கண்ணன் ஆத்திரம் தீராமல், தொழிற்சங்க முக்கிய தலைவரான தோழர் டி ஆர் புருஷோத்தமனையும், ராமலிங்கம மற்றும் 13 பேரை கைது செய்தும்,வேண்டுமென்றே வழக்கு போட்டு செய்யார் முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் போட்டு சிறையிலடைத்தார் தொழிற்சங்க ஆபீசிலிருந்த தோழர்கள் கே ஆர் சுந்தரம், வே கண்ணன் ஆகியோரையும் கைது செய்து போலீஸ் நிலையத்தில் வைத்தார்.

அதற்குப் பிறகு செய்யார் டிப்டி சூப்ரன்டெண்ட் வந்த பிறகு நாங்கள் விபரத்தைக் கூறினேம், "தர்ணு நடத்தி வந்ததொழிலாளர்கள் மீது முதலாளி ஆட்களை ஏவிவிட்டு, மாடி மீதிருந்து கல்லெறிந்ததைப் பற்றி விசாரித்து கண்டுபிடித்து நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கோரினேம். அதன் பிறகு எங்கள் இருவரையும் விடுதலை செய்துவிட்டு, மற்றவர்களை சிறையிலடைத்தார்கள்.

#### பத்திரிகையில் இருட்டடிப்பு

பட்டு முறுக்குமில்பேக்டரி முதலாளிகளின் கையாட்களாக போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் கண்ணன் ஆத்திரம் தீர, ஏழை தொழிலாளர் மீது தடியடி தர்பார் நடத்தி விட்டு தொழிலாளர்கள் மீது பழியை போடடு, அதாவது தர்ணு நடத்தி வந்த தொழிலாளர்கள் தான் அண்ணுமலை செட்டியார் சில்க் பேக்டரி மீது கற்களை வீசி கலாட்டா செய்ததாகவும், பேக்டரிக்குள் நுழைந்ததாகவும், அசனுல, கூட்டத்தைக் கலைத்தாகவும், தடியடியே நடத்தவில்லை என்றும, யாரும் காயம் அடையவில்லை என்றும், போலீஸ் சூப்ரன்டெண்ட் 19-7-73-ந் தேதி மாலைமுரசு பத்திரிக்கையில் அறிக்கை விட்டு, 13 தொழிலாளர்களை கைது செய்துள்ளதாக மட்டும செய்தி கொடுத்துள்ளார்கள்.

அண்ணுமலை செட்டியார் சில்க் பேக்டரி முதாலாளியும், அவருடைய கையாட்களும், மாடி மீதிருந்து தாணு நடத்தி வந்த தொழிலாளர் மீது சரமாரியாக கல்லெறிந்ததை சப்-இன்ஸ்பெக்டர் கண்ணன் மூடி மறைத்து விட்டு மேலதிகாரிகளுக்கு பொய்யான தகவல்களை கொடுத்துள்ளார். அவரை பாதுகாக்க மேலதிகாரிகள் அந்த பொய்யான தகவல்களையே நம்பி பத்திரிக்கையில் அறிக்கை விடுகிருர்கள். அக்கிரமமானபோலீஸ் தடியடியைக் கண்டித்து நான் 'மாலை முரசு' பத்திரிக்கைக்கு 19-7-73-ந் தேதி அறிக்கை கொடுத்துள்ளதை இருட்டடிப்பு செய்யப்பட்டுள்ளது.

#### முதலாளியின் கையாள்

ஆரணி கொசப்பாளையம் போலீஸ் முகமாக காட்சி அளிக்கிறது சில்க் முறுக்கு பேக்டரி தொழிலாளர்கள் வசிக்கும் நகர-கிராமப் குடிசைகளில் போலீஸ் லாரிகளில் போய் மிரட்டுகின்றனர். திமுக ஆட்சியில், முதலாளியின் கையாளாக சப்-இன்ஸ்பெக்டர் கண்ணன் இருந்து கொண்டு முதலாளிகளுக்கு பாதுகாப்பு கொடுக்க, தொழிலாளர்களின் போராட்ட உறுதியைக் குலைத்து தொழிற்சங்கத்தை உடைக்கவும்போலீசின் பயங்கர தர்பார் கட்டவிழ்த்து விடப்பட்டுள்ளது.

19-7-73-ந் தேதி சர்வ கட்சி சமிட்டி கூட்டம், போலீஸ் தடியடியை கண்டித்து எடுக்க வேண்டிய நடவடிக்கைப் பற்றி இங்கு நடந்து கொண்டிருந்தபோது, அந்த கட்டிடத்திற்குள் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் கண்ணன் போலீஸ் படையுடன் நுழைந்து, வலது கம்யூனிஸ்ட் கட்சியின் தோழர் அண்ணுமலை மற்றும 4 பேரை கைது செய்து வழக்கு போட்டுள்ளார்.

கைது செய்யப்பட்டு செய்யார் சப்—ஜெயிலில் அடைத்து வைத்த அத்தனை தோழர்களையும் செய்யார் முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட் ஜாமீனில்விடுதலை செய்துள்ளார்.

#### முதலமைச்சருக்கு தந்தி

இந்த அக்ரமமான போலீஸ் தடியடி பற்றி, 18—7—73-ந் தேதி இரவே, முதல் அமைச்சர் கருணநிதிக்கும், தொழிலாளர் அமைச்சர் ராஜாராமுக்கும், போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலுக்கும் தோழர் கே ஆர் சுந்தரம தந்தி அனுப்பி, சப்--இன்ஸ்பெக்டர கண்ணன் மீதும், அண்ணுமலை செட்டியார் சில்க் பேக்டரி முதலாளி மீதும் நடவடிக்கை எடுக்கக்கோரியுள்ளார், போலீஸ் தடியடி பற்றி நீதி விசாரணை கோரியுள்ளார்.

2—7—73-ந் தேதி முதல் ஆரணியிலுள்ள 42 சில்க் முறுக்கு பேகடரிகள் சட்ட விரோதமாக கதவடைப்பு செய்யப்பட்டுள்ளதால், 2 ஆயிரம் ஆண், பெண் தொழிலாளர்கள் கடும பட்டினியால் பாதிக்கப்பட்டுள்ளார்கள்.

#### தி மு க பிரமுகரின் பழிவாங்கும் போக்கு

தி மு க முக்கிய பிரமுகர் ஆரணியில் கே. பி சுந்தரம செட்டியார்தான்.இவர் முதலாளி சங்க செயலாளர். அவரது பேக்டரியில் ஒரு தொழிலாளியை வேலையைவிட்டு நீக்கி பழிவாங்கி கதவடைப்பு செய்து விட்டார்.

மற்றும் எல்லா பேக்டரிகளையும்கதவடைபபு செய்ய வேண்டுமென்று தி மு க பிரமுகர் கே. பி சுந்தரம் எல்லா சில்க் முறுக்கு பேக்டரி முதலாளிகளையும சந்தித்துகதவடைப்பு செய்யச் சொலலி மூடி விட்டார் தி. மு. க. சமதர்மம் வளர்க்கும லட்சணபஇதுதானு?

சென்னை டிப்டி லேபர் கமிஷனர் திரு ராஜா சுப்பிரமணியம் இரண்டு முறை சென்னையில் சமரசப்பேச்சு வார்த்தை நடத்தினுர். தொழிலாளர்களின் பொதுவான கோரிக்கைகளை பிறகு பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்றும், உடனடியாக இடைக்கால சம்பள உயர்வு ரூ 15 கொடுக்க வேண்டுமென்றும். கதவடைப்பு காலத்திற்கு நஷ்டஈடு கொடுக்க வேண்டுமென்றும், வேலையை விட்டு நீககிய ஒரு தொழிலாளியை மீண்டும் வேலைக்கு எடுத்துகொள்ள வேண்டுமென்றும், யாரும் பழிவாங்கக்கூடாது என்றும் சமரச ஆலோசனை கூறினுர்.

#### தினமணியின் புளுகு

தொழிற் சங்கம் அதை ஏற்றுக் கொண்டது ஆனுல் சில்க்பேக்டரி முதலாளிகள் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. வேலூர் லேபர் ஆபீசரும் முயற்சித்து வருகிருர்.

தினமணி 20—7—73 தேதிய காலைப்பதிப்பு "ஆரணியில் தொழிலாளர்கள் மறியல்" போலீசார் மீது கல்வீச்சு என்ற விஷமத்தனமான செய்தியை வெளியிட்டுள்ளது.

வேலூர் தினமணி நிருபரிடம் 19—7—73ந் தேதி நான் ஆரணியில் போலீஸ் தடியடியைக் கண்டித்து அறிக்கை கொடுத்தையும பிரசுரிக்காமல் இருட்டடிப்பு செய்யப்பட்டது.

ஆரணியில் போலீசார் சதித் திட்டம் போட்டு முதலாளிக்கு ஆதரவாக போராட்டத்தை உடைக்க பொய் வழக்கு ஜோடனை செய்துள்ளனர் 20—7—73 வேலூர் தினத்தந்தியில் செய்தி வந்துள்ளபடி பட்டுமில் அதிர் அண்ணுமலை செட்டியார் வீட்டுக்குள் நுழைந்து சுப்பிரமணியததை தாக்கினுர்கள் என்று 18 பேர்களை கைது செய்துள்ளதாகவும், கல் வீச்சில் 5போலீஸ்காரர்கள் உள்பட 9 பேர் காயமடைந்ததாகவும் கட்டுக்கதையைகட்டி போலீஸ் அதிகாரிகள் வழக்குபோட்டுள்ளனர்.

ஆரணி பட்டு மில் தொழிலாளர்கள் மீது போலீசார் தடியடி நடத்தியதை கண்டித்து நான் 20—7—73-ம் தேதி ஒரு அறிக்கை கொடுத்தேன். அதை பிரசுரிக்க மறுத்துவிட்டனர். காரணம், 'தினத்தந்தி' ஆசிரியர் குழுவை போலீஸ் மிரட்டுவதால், ஆரணி பட்டுமில் தொழிலாளர் போராட்டம் பற்றி போலீஸ் கொடுக்கும் செய்தியைத்தான் போட வேண்டும் என்றும், தொழிற்சங்கம் கொடுக்கும் செய்தியை பிரசுரிக்கக் கூடாது என்றும்போலீசார் பத்திரிகைகாரர்களை மிரட்டுகிருர்கள் என தகவல் கிடைத்தது.

ஆரணியில் கூட்டங்கள் ஊர்வலங்கள் நடத்த போலீஸ் தடைச்சட்டம் விதித்துபேச்சுரிமையையும், போராட்ட உரிமையையும் பறித்துள்ளது. தொடர்ந்து போலீஸ் கெடுபிடி நீடிக்கிறது.

---

## '50' பைசா வாழ்க்கையில் 3 கோடியே 70 இலட்சம் பேர்

நமது இந்திய நாட்டில் நாள் ஒன்றுக்கு 50பைசாவில் வாழ்க்கை நடத்தி வருபவர்கள் எத்தனை பேர் தெரியுமா?

ஒருவரல்ல! இருவரல்ல!

ஓராயிரம் அல்ல! ஈராயிரம் அல்ல!

ஒரு லட்சம் அல்ல! இரு லட்சம் அல்ல!

3 கோடியே 70 இலட்சம் பேர்.

அதுவும் இந்தஆண்டில் அல்ல.

1968—69-ம் ஆண்டில்!

இந்த விவரங்கள் தேசிய சர்வே குழுவின் கணக்குப்படி கிடைத்தவையாகும்!

அப்படியென்ருல்,

நான்கு ஆண்டுகளும் கழித்து, நெருக்கடி தீவிரமாகி வரும்—வேலையின்மையும், பஞ்சமும். பட்டினியும் அதிகரித்துவரும் 1973-ல் நிலைமை என்னவோ? இது வன்ரே காங்கிரஸ் ஆட்சியின் சாதனை!

---

### கோவை பீளமேடு

## பள்ளி மாணவர்கள் வேலை நிறுத்தம்

கோவை, ஜுலை, 31—

மாணவர் தலைவரை சஸ்பெண்ட் செய்ததைக் கண்டித்து இங்குள்ள பீளமேடு சர்வஜன உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் கடந்த 27ந் தேதி வேலைநிறுத்தம் செய்தனர்.

உயர்நிலைப் பள்ளி மாணவர் தலைவரும்,இந்திய மாணவர் சங்கஉறுப்பினருமானதோழர்முத்துசாமியை 'அரைநாள் பள்ளிக்குவரவில்லை' என்ற காரணத்தை காட்டி தலைமை ஆசிரியர் ஒரு வாரம் சஸ்பெண்ட் செய்ததால் இந்த வேலை நிறுத்தம் நடந்தது.

நிர்வாகத்தின் பழிவாங்கும் போக்கை எதிர்த்து அனைத்து மாணவர்களும் வேலை நிறுததத்தில் கலந்து கொண்டனர்.

மாணவர்களின் ஒன்றுபட்ட போராட்டத்தைக் கண்ட நிர்வாகம் இறுதியில் பணிந்துவிட்டது. தோழர் முத்துசாமி உடனடியாக வகுப்பில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்.

ஆணவப் போக்கைக் கொண்ட ஜி.ஆர்.கோவிந்தராஜுலு நிர்வாகத்தின் கொட்டத்தை மாணவர்கள் அடக்கிவிட்டார்கள்,

---

# கம்பத்தில் முச்சந்தி

### புலியூரான்

முதலில் ஒரு படி
படிப்படியாக மூணுபடி
மூணுபடி யில்லையேல்
முசசந்தியில் சவுக்கடி.

முத்தான வார்த்தைகளை
முத்தார மாக்கி வைத்து
சத்தான மக்களையும்
சாகடிக்கப் பார்க்கின்ருர்.

முழுசாக மூணுபடி
(அரிசிதான் உப்பு அல்ல)
தேர்தலில் பறைசாற்றி
ஆட்சியில் அமர்ந்திட்டு
ஒரு படியும் அளக்க வில்லை.

படி அரிசி மூணு ரூபாய்
பதுக்கியே விறபதனுல்
மூன்று படி கேட்க இங்கு
முட்டாள்கள் நாங்களில்லை.

வறுமையால் பட்டினியால்
வாடுகின்ற இந்நாளில்
கள்ளச்சந்தை பேர்வழியே
கடத்துகிருன் லாரியிலே,

கண்ணிபமே கைபிடித்து
கட்டுபபாடாய் ஒன்றுகூடி
கடத்திட்ட அரிசியை
தடுத்திட்ட மக்கள் அங்கு.

கள்ளச்சந்தை அரிசியை
நகர் ஆட்சியில் ஒப்படைத்து
ஒரு ரூபாய் எண்பதுக்கே
ஒரு படியே போடு என்ருர்.

அரிசியை பெற்று அன்று
பசியை போக்கிடவே
ஆட்சியாளர் ஆணைக்கு-மக்கள்
கம்பத்தில் காத்து நின்ருர்.

ஆணைக்கு பதிலாக
காவலரே வந்தடைந்து
அரிசியை அளக்காமல்
துபபாக்கி ரவை அளந்தார்.

துப்பாக்கி ரவை உண்டு
ரத்தததை துப்பிட்ட
மூத்தோரும் இளையோரும்
முச்சந்தியில் வீழ்ந்தனரே

முச்சந்தி யாருக்கு
முத்தாய்ப்பு வைத்த தென்று
கம்பத்து நகர மக்கள்
குமுறுகிருர் மனத்தினிலே.

குமுறும் எரிமலையோ
குளிர் நீரைத் தருவதில்லை!
குண்டடி பட்டவனும
குனிந்து விடப்போவதில்லை.

---

### சம்பளக்குழு சிபாரிசை எதிர்த்து, போனஸ் கோரி

# மத்திய மாநில அரசு ஊழியர் வரலாறு படைத்த மாநாடு

## டெல்லியில் மாபெரும் ஊர்வலம்

புதுடெல்லி, ஜுலை:3 —

**போனசிற்காகவும்,மூன்ரும் சம்பளக் குழு பரிந்துரைகளுக்கெதிர்ப்பு தெரிவித்தும் புதுடில்லியில் ஜுலை 25, 26 தேதிகளில் மத்திய-மாநில அரசு ஊழியர்கள் சிறப்பு மாநாடு நடைபெற்றது.**

125-க்கும் அதிகமான மத்திய—மாநில அரசு ஊழியர்கள் சங்கத்தின் பிரதிநிதிகளாக 6 ஆயிரம் பேர் இந்த மாநாட்டில் கலந்து கொண்டனர்.

இந்த மாநாடு, சி ஐ டி யூ எச் எம் பி, யூ டி யூ சி யூ டி யூ சி (லெனின் சராணி) டி யூ சி சி அகில இந்திய இன்சூரன்ஸ் எம்ப்ளாயீஸ் அசோசியேஷன் ஆகிய அமைப்புகளின் தலைமையில் நடத்தப்பட்டது.

மேலும் மத்திய அரசு ஊழியர்களின் மகா சம்மேளனம் தபால் தந்தி ஊழியர் சம்மேளனம், அகில இந்திய மாநில அரசு ஊழியர்கள் சங்கம், ரயில்வே ஊழியர்கள் மகாசம்மேளனம், அகில இந்திய ஓடும் தொழிலாளர் சம்மேளனம் ஆகியவற்றின் பிரதிநிதிகளும்இம் மாநாட்டில்கலந்து கொண்டனர்.

ஏராளமான பாதுகாப்பு துறை ஊழியர்களும் கலந்துகொண்டனர்.

பாராளுமன்ற உறுப்பினர்கள் பலர் பார்வையாளர்களாக வந்திருந்தனர்.

மாநாடு நடவடிக்கைகளுக்கு தோழர்கள் பி. டி. ரணதிவே (சி ஐ டி யூ) ஜதீன் சக்கரவர்த்தி (யூ டி யூ சி) பிரிதீஷ்சந்தா (யூ டி யூ சி, லெனின் சரானி, சிட்டபாசு (டி யூ சி சி) ஆகியோரை கொண்ட குழு தலைமை வகிததது.

மத்திய அரசு ஊழியர்கள் சம்மேளனப் பொதுச் செயலாளரான தோழர் எஸ். கே. வியாஸ் மூன்ரும் சமபளக்குழு பரிந்துரைக்கு கண்டனம் தெரிவித்து நகல் தீர்மானம் கொண்டு வந்தார்.

அரசின் ஊதிய முடக்கக் கொள்கையின் மறு பதிப்பாகஇந்த சம்பள கமிஷன் அறிக்கை அமைந்துள்ளது என்று அவர் பேசினுர்.

தீர்மானத்தின் மீது நடந்த விவாதததில் தோழர்கள் கே. ஜி. போஸ், ஏ எஸ். ராஜன், என். எஸ் பங்கூ, ஜி. கே. பரத்வாஜ், பி. ஆர். மேனன், எல். ஏ. பிரசாத், கே. அனந்தன் நம்பியார், ஜோ. கேஸ்வர், பி. கே. நாக் சவுத்ரி, கே.ஆதிநாராயணு, அரபிந்தகோஷ் ஆகியோர் கலந்து கொண்டனர்.

#### கண்டன தீர்மானம்

கண்டனத்தீர்மானம் ஏக மனதாக நிறைவேற்றப்பட்டது. அரசு, தனியார்துறைகள் உட்பட அனைத்துத் துறைகளிலும் வேலை செய்யும் ஊழியர்களுக்கும் போனஸ் வேண்டும் என்ற தீர்மானமும் ஒரு மனதாக நிறைவேற்றப்பட்டது.

மற்றும் ராஜஸ்தான் அரசு ஊழியர்கள் போராட்டத்துக்கு எதிராக நடக்கும் அடக்கு முறைகளைக்கண்டித்தும், விலைவாசி உயர்வு வேலையின்மை, போன்ற மக்களை பாதிக்கும் பிரச்சினைகளுக்கு நாடு தழுவிய போராட்டம் நடத்துவதற்கான திட்டம் தயாரிக்க ஐக்கிய தொழிற்சங்கக் கவுன்சிலைக் கேட்டுக் கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

#### மாபெரும் ஊர்வலம்

தோழர் பி. ராமமூர்த்தி தனது முடிவுரையில், ஐக்கிய தொழிற்சங்க கவுன்சில், மத்திய —மாநில அரசு ஊழியர்கள் போராட்டங்களுக்கு எந்நாளும் ஆதரவளிக்கும் என்று உறுதி கொடுத்தார்.

மாநாடு முடிவடைந்ததும் டெல்லியை அதிரவைத்த பிரம்மாண்டமான ஊர்வலம் நடைபெற்றது ஊர்வலத்திற்கு தோழர் நாக்சவுத்திரி தலைமை வகித்தார்.

பிறகு நடைபெற்ற பொதுக்கூட்டத்தில்தோழர்கள் எஸ் கே வியாஸ், பி.டி. ரணதிவே, பிரிதீஸ் சந்தா ஆசியோர் பேசினர்.

---

### காரைக்குடி

## அஞ்சல் ஊழியர் சங்க ஆண்டுவிழா

காரைக்குடி, ஜுலை. 31— "காரைககுடி கோட்டம் அனைத்திய அஞ்சல் தபால் காரர்கள் நான்காம் பிரிவு அண்டு ஈடி ஊழியர்கள் சங்கத்தின் மூன்ருவது ஆண்டுவிழா ஜுலை 22-ந் தேதி யன்று காரைக்குடி எஸ் எம். எஸ். உயர்நிலைப் பள்ளியில் நடந்தது. சங்கத் தலைவர் திரு. எஸ இராம கிருட்டிணன் தலைமைவகித்தார்.

அன்று காலை 10 மணிக்கு துவங்கிய ஆய்வுக் கூட்டத்தில், நடப்பு ஆண்டுக்கான நிர்வாகிகளாக திரு ஆர். ரெங்கசாமியை தலைவராகவும், திரு. எம். முகம்மது அலியை செயலாளராகவும், திரு என். ராமசாமியை பொருளாளராகவும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பிறகு மாலை 3 மணி அளவில் துவங்கிய பொது அரங்கில், திருவாளர்கள் எம். ஆண்டியப்பன், மாநில அமைப்புச் செயலாளர் கே. தங்கராசு, சித்திரவேலு கே.காளிமுத்தன், ராஜய்யா ஏ. சீனிவாசநாயுடு மற்றும் பல தொழிற்சங்க பிரதிநிதிகளும் சொற்பொழிவாற்றினுர்கள்,

இறுதியில் சங்கச் செயலாளர் திரு. எம். முகம்மது அலி நன்றி கூறினுர்.

---

# சீன கட்சி காங்கிரஸ்

தாய்செய், ஆகஸ்ட். 2—

**சீன கம்யூனிஸ்ட் கட்சியின் 10-வது காங்கிரஸ் அக்டோபர் மாதம் நடைபெறும் என்று நவ சீன செய்தி ஸ்தாபனம் தெரிவித்துள்ளது.**

**ஜுன் மாதம் நடைபெற்ற கட்சி அரசியல் நிர்ணயக் குழுவின் விரிவான கூட்டத்தில் இந்த முடிவெடிக்கப் பட்டுள்ளது.**

# திமுக அரசின் அடக்கு முறைக்கு சென்னைப் பேரணி கண்டனம்

சென்னை, ஆக. —

**திமுக ரவுடிகளால் தோழர் வி. பி. சிந்தன் தாக்கப்பட்டதைக் கண்டித்து அனைத்துக்கட்சி, சங்கங்கள் கடந்த 29-ந்தேதி சென்னை கண்ணப்பர் திடலில் நடந்த பேரணியில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் வருமாறு:-**

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் முக்கிய தலைவர்களில் ஒருவரும் சி ஐ டி யூ வின் தமிழ் மாநில துணைச் செயலாளருமான தோழர் வி பி சிந்தன் மீது கொலைத் தாக்குதல் நடத்திய திமுக ரவுடித்தனத்தை இக்கூட்டம் வன்மையாகக் கண்டிக்கிறது.

## கைது செய்க

இக்கொலைத் தாக்குதல் நடத்தியவர்கள் மீதும், இதற்கு திட்டமிட்டவர்கள், பகிரங்கமாக தண்டு பிரசுரம் வெளியிட்டு கொலை வெறியை தூண்டியவர்கள் அனைவரையும் கைது செய்ய வேண்டுமென்று இக்கூட்டம் கோருகிறது.

இதில் சம்பந்தப்பட்டவர்கள் ஆளுப கட்சியைசேர்ந்தவர்கள் என்பதால் அவர்கள் அனைவரையும் கைது செய்ய போலீஸ் இலாக தயக்கம் காட்டுவதை இந்த கூட்டம வன்மையாக கண்டிக்கிறது.

## தப்ப முடியாது

இதில் சம்பந்தப்பட்டவர்களை கண்டுபிடிக்கவும தண்டிக்கவும் காவல் துறையும் அரசும தவறினால் - வர்க்க உணர்வு பெற்ற தொழிலாளி வர்க்கத்தின் தண்டனையிலிருந்து தோழர் வி பி சிந்தனை தாக்கிய திமுக ரவுடிகள் மட்டுமல்ல அவர்களை பாதுகாக்கும் போலீசும், திமுக அரசும் கூட தப்ப முடியாது என்று இக்கூட்டம் எச்சரிக்கை செய்கிறது.

வளர்ந்து வரும் தொழிலாளர் இயக்கத்தையும், ஜனநாயக இயக்கதையும் ஒடுக்குவதற்காகவே ஆளும் வர்க்கங்கள் இத்தகைய நீசத்தனமான தாக்குதலை நாடு முழுவதும் நடத்துகிறது இதை எதிர்த்து தொழிலாளி வர்க்கம் விழிப்புடனும், உறுதியுடனும் கட்டுப்பாடுடனும் தொடர்ந்து போராட முன்வரவேண்டுமென்று அறைகூவல் விடுக்கிறது.

## மாதவரத்தில் பெரியகுப்பம் பாணி

19-7-73 அன்று தங்களுடைய நியாயமான கோரிக்கைகளுக்காக ஒருநாள் அடையாள வேலை நிறுத்தம் செய்த பால் பண்ணை தொழிலாளர் மீது போலீசார் நடத்திய தாக்குதலை இக்கூட்டம் வன்மையாக கண்டிக்கிறது

இதை தொடர்ந்து மாதவரத்தில் ஹரிஜன மக்கள் வசிக்கும் பகுதியில் "பெரிய குப்பம்" பாணியில் போலீசார் தாக்குதல் நடத்தியுள்ளனர்.

## நீதி விசாரணை செய்க

வீடுகளில் புகுந்து பெண்களையும் பச்சிளம் குழந்தைகளையும் தாக்கியுள்ளனர். கூரை வீடுகளை பிய்த்தெறிந்துள்ளனர். தட்டு முட்டு சாமான்களையும் சட்டிபானைகளையும் கூட உடைத்து நொறுக்கியுள்ளனர் கைகால் முடமான பேச முடியாத ஊமைச்சிறுவனையும் பசுமாட்டையும் கூட தாக்குகின்ற அளவுக்கு போலீசின் வெறிச்செயல் சென்றுள்ளது. நிரபராதிகளான மக்கள மீது நடத்திய தாக்குதல் பற்றி நீதி விசாரணை செய்ய வேண்டுமென்றும இதற்கு பொறுப்பான போலீஸ் அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும் இக்கூட்டம் கோருகிறது.

இறுதியில், மதுரை குமார் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சி சிறப்பாக நடந்தது.

## ரயில்வே தொழிலாளர் மீது தாக்குதல்

தங்களுடைய நியாயமான கோரிக்கைகளை வற்புறுத்தி ரயில்வே அதிகாரியிடம் மகஜர் கொடுக்கவந்த ரயில்வே தொழிலாளர் மீது போலீசார் காட்டுமிராண்டித்தனமாக கண்ணீர்ப்புகை, தடியடிப் பிரயோகம் செய்து பலரை படுகாயப்படுத்திய கொடுமையை இக்கூட்டம் வன்மையாகக் கண்டிக்கிறது

இதற்கு பொறுப்பான போலீஸ் அதிகாரிகள் மீது உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று இக்கூட்டம் கோருகிறது.

போலீஸ் அடக்குமுறையை கண்டித்து வீராவேசத்துடன் கண்டன வேலை நிறுத்தம் செய்த ரயில்வே தொழிலாளர்களை இக்கூட்டம் பாராட்டுகிறது.

# கேரள 'பந்த்'

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தின்தலைநகரில் எல்லா கடைகளும் மூடப்பட்டு இருந்தன. ரயில் நிலையத்திலும், நகரிலும் சி. ஆர். பி, எஸ். ஏ. பி போலீஸ் படை குவிக்கப்பட்டிருந்தன.

## தடை மீறினால் கைது

கோட்டயம் நகரில் போடப்பட்டிருந்த தடையை மீறி ஊர்வலம சென்றதாக மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிச் செயலாளர் தோழர் டி கே. ராமகிருஷ்ணன் கைது செய்யப்பட்டார்.

கோட்டயம் மாவட்டம் 'பாலா'யில் தடையைமீறியதாக கேரளா காங்கிரஸ் எம். எல். ஏ. கே எம். மாணி கைதானர்.

## இடுக்கி

இடுக்கி மாவட்டத்தில் இடுக்கி பிருஜக்ட் மின்சாரத் தொழிலாளர்கள், தோட்டத் தொழிலாளர்கள் முழுமையாக வேலை நிறுத்தம செய்தனர்.

## எர்ணாகுளம்

எர்ணாகுளம் மாவட்டத்தில் இதற்குமுன்பு இல்லாத அளவில 'பந்த' முழுவெற்றி அடைந்தது.

கேரளத்திலேயே பெரிய வர்த்தக நகரும் ஜன நெருக்கடி நிறைந்த நகருமான கொச்சி பாலைவனம், போல காட்சி அளித்தது. 'பாக்ட்' உர ஆலைத் தொழிலாளர்கள், களமசேரி தொழிலாளர்கள் போக்குவரத்துத் தொழிலாளர்கள், டாக்சி ஆட்டோ ரிக்ஷா டிரைவர்கள வேலை நிறுத்தம் செய்தனர்.

கொச்சியில் உயர்நீதி மன்றத்தில்கூட வேலை நடைபெறவில்லை.

எர்ணாகுளம் மாவட்டம் கோதமங்கலத்தில் கேரள காங்கிரஸ் எம் எல்.பி, மார்க் கோசும், மூவாற்றுப்புழாவில் மார்க்சிஸ்ட் தலைவரும் முன்னாள் எம்.பியுமான தோழர் பி பி எஸ். தோசும் இன்று காலை போலீசாரால் கைது செய்யப்பட்டனர்.

கொச்சியில் தடையை மீறியதாக கேரள காங்கிரஸ்தலைவர் கே-எம் ஜார்ஜ் கைதானர்.

## தடியடி

சொச்சியில் ஊர்வலமாகச் சென்ற 'பந்த்' ஆதரவாளர்கள் மீது கடுமையான தடியடி நடந்தது. நூற்றுக்கணக்கான மார்க்சிஸ்ட் தோழர்கள் கைதானர்கள்.

தபால்—தந்தி வேலைகள் எர்ணாகுளம் மாவட்டத்தில் முடங்கிவிட்டது.

## ஆலப்புழை

ஆலப்புழை நகரிலும் முக்கியப் பகுதிகளிலும் முழு அடைப்பு நடைபெற்றது. குட்டநாட்டில் விவசாய வேலைகள் நடைபெறவில்லை.

## துப்பாக்கிச் சூடு

ஆலப்புழைக்கு 30 மைல் தொலைவில் 'பந்தளம்' என்ற இடத்தில் 'பந்த்' ஆதரவாளர்கள் வெற்றி ஊர்வலம் அமைதியாக நடத்தியபோது போலீசார் கண்ணீர்ப்புகை வீசி ஊர்வலத்தைக் கலைக்க முயன்றனர் ஊர்வலம் கலைந்து செல்லவில்லை. உடனே போலீசார் தடியடியும் தொடர்ந்து துப்பாக்கி சூடும் நடத்தினர்.

எத்தனைபேர்கள் காயம் அடைந்தார்கள்? இறப்பு ஏற்பட்டுள்ளதா போன்ற செய்திகள் எதுவும் கிடைக்கவில்லை:

ஆலப்புழை மாவட்டம் முழுவதும ஆயுதப் போலீசார்படை குவிக்கப்பட்டிருந்தது.

## மலப்புரம்

மலப்புரம் மாவட்டத்தில் தோட்டத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர்

## மாணவர் தலைவர் கைது

எஸ். எப். ஐ கேரள மாநிலத தலைவர் தோழர் தேவதாஸ் பொற்றக்காடு நிலமபூரில் கைது செய்யப்பட்டார்.

கோழிக்கோடு, குண்ணூர் மாவட்டங்களிலும 'பந்த்' வெற்றிகரமாக நடைபெற்றது. இந்த மாவட்டங்களில் தனியார் அரசு போக்குவரத்து ஊழியர்களின் வேலை நிறுத்தத்தால் போக்குவரத்து அடியோடு பாதித்துவிட்டது.

குண்ணூர் மாவட்டத்தின் சில பகுதிகளில் தடியடி நடத்தியுள்ளதாக செய்தி கிடைத்திருக்கிறது.

## கைதானவர்கள் விடுதலையாகவில்லை

'பந்த்'தினை ஒட்டி மாநிலம் முழுவதும கைதான எதிர்க்கட்சித் தொண்டர்கள் இதுவரையிலும விடுதலை செய்யப்படவில்லை.

## வாழ்த்து

'பந்த்'தினை வெற்றிகரமாக நடத்திய கேரள மக்களுக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்சி செயற்குழுவும், கேரள காங்கிரஸ் செயற்குழுவும் வாழ்த்துத தெரிவித்துள்ளது.

## கண்டனம்

'பந்த்' தினை ஒட்டி போலீசார் நடத்திய அடக்குமுறைச்செயல்களுக்கு தோழர் இஎம்எஸ் கண்டன அறிக்கை விட்டுள்ளார்.

# ஒரே நாளில் வெளியான இரண்டு செய்திகள்

**விஜயவாடாவில் உணவுப்பொருட்களை பதுக்கி வைத்து கள்ள மார்க்கெட்டில் விற்று வந்த ஒரு முதலாளியின் கடையை வலது கம்யூனிஸ்ட் கட்சியின் மாதர் பிரிவு 'இளைஞர் பிரிவு' ஊழியர்கள் முற்றுகையிட்டு உணவுப் பொருட்களைக் கைப்பற்றி குறைந்த விலைக்கு பொதுமக்களுக்கு விநியோகித்தனர்.**

**விரைந்து வந்த போலீஸ் அவர்கள் அனைவரையும் கைது செய்து காவலில் வைத்துள்ளது.**

"இந்தியன் எக்ஸ்பிரஸ்" ஆகஸ்ட்-1.

**கேரளத்தில் பதுக்கலுக்கும், கள்ள மார்க்கெட்டுக்கும் உணவு நெருக்கடிக்கும் எதிர்ப்பு தெரிவித்து ஆகஸ்ட் 2-ம் தேதி நடத்தும் 'பந்த்'க்கான தயாரிப்புகளில் ஈடுபட்டிருந்த எதிர்க்கட்சித் தொண்டர்களை போலீஸ் பெருவாரியாக கைது செய்துள்ளது.**

"இந்தியன் எக்ஸ்பிரஸ்" ஆகஸ்ட்-1.

**அங்கு வலது கம்யூனிஸ்ட் போராட்டம்.**

**இங்கு வலது கம்யூனிஸ்ட் அரசின் அடக்குமுறை.**

# மதுரையில் மாணவர்கள்மீது போலீஸ் தடியடி

மதுரை, ஆக 3—

மதுரை கலெக்டர் அலுவலகம்முன் நேற்று[வியாழன்) யாதவா கல்லூரி மாணவர்கள்மீது போலீசார்தடியடிப் பிரயோகம் செய்தனர்.

மாணவர்கள், பட்டமேற்படிப்பு கல்வியைத தொடருவதற்கு தடையாக மதுரைப் பல்கலைக் கழக செனட் எடுத்துள்ள பாதக முடிவை எதிர்த்தும், செனட் சிண்டிகேட் போன்ற அமைப்புக்களில் பிரதிநிதித்துவம் கோரியும் யாதவா கல்லூரி மாணவர்கள் நேற்று வேலை நிறுத்தம செய்தனர்.

தங்களது கோரிக்கையை வலியுறுத்தும் பொருட்டு சுமார் 500 மாணவர்கள் ஊர்வலமாக கலெக்டர் அலுவலகம் சென்றனர்.

அங்கு கலெக்டரிடம் கோரிக்கை மனுவை அளித்துவிட்டு திரும்பும் போது, அவர்கள் மீது போலீசார் கடுமையான தடியடிப் பிரயோகம செய்தனர். மாணவர்களை ஓட ஓடவிரட்டினர். இந்தத்தடியில் பல மாணவர்கள் காயமடைந்ததாக கூறப்படுகிறது.

## மாணவர் சங்கம் கண்டனம்

யாதவா கல்லூரி மாணவர்கள் மீது போலீசார் நடத்திய தடியடிப் பிரயோகத்துக்கு இந்திய மாணவர் சங்கத்தின தமிழ் மாநிலக் குழு கண்டனம தெரிவித்து அறிக்கை வெளியிட்டுள்ளது.

அதில், போலீசாரின் வன்முறையைக் கண்டித்து மாணவர்கள் கிளர்ந்தெழ வேண்டுமென்று தமிழக மாணவச் சமுதாயத்தை அறைகூவி அழைத்துள்ளது.

# மார்க்சிஸ்ட் கம்யூ.....

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

1971-ம் ஆண்டிலும், 1972-ம ஆண்டிலும் நடந்த தேர்தல்களின் போது பிரதமர் இந்திராகாந்தியும் அவரது கூட்டாளிகளும, வறுமையே வெளியேறு என்றும, ஜனநாயகத்தை நிலைநாட்டுவோமென்றும் சமதர்மத்தை ஏற்படுத்துவோம் என்றும் வானதிர முழக்கிய வாய்ச்சவடாலவாககுறுதிகளெல்லாம் வெறும் வெத்து வேட்டு — புஸ்வாணங்கள் தான் என்பதை—இவ்வளவு குறுகிய காலத்தில் நாட்டு மக்கள் முன்னால் மெய்ப்பிக்கப்பட்டதை, இதற்கு முன்னால் என்றுமே கண்டதே இல்லை.

## வெறும் காங்கிரஸ் எதிர்ப்பு மட்டும் போதுமா?

கடந்த நான்கு ஆண்டுகளாக நாட்டிலே நடைபெற்ற நிகழ்ச்சிகள் ஒரு முக்கிய விஷயத்தை நிரூபித்து விட்டது அதாவது, பிரதமர் இந்திரா காந்தியால் தலைமை தாங்கப்படும் ஆளும் காங்கிரஸின் ஜனவிரோதக்கொள்கைகளை, வெறும் "காங்கிரஸ் எதிர்ப்பு" அரசியலைக் கொண்டே எதிர்த்துவிட முடியாது என்பது நிரூபணமாயிற்று. சோஷலிஸ்ட் கட்சியும், இதர பல இடதுசாரி ஜனநாயகக் கட்சிகளும், குழுக்களும், வலதுசாரி பிற்போக்கு சக்திகளையும், மற்றும் ஜாதி வெறியர்களையும். மதவெறியர்களையும் மொழி வெறியர்களையும், பிரிவினைவாதிகளையும் கொண்ட அதே முகாமில் இடதுசாரி, ஜனநாயக சக்திகளையும் ஒன்றுகப் போட்டு குழப்பி—காங்கிரஸ் எதிர்ப்பு அரசியல் நடத்தினர்கள்.

அந்த வெறும் காங்கிரஸ் எதிர்ப்பு அரசியலைக் கொண்டு ஆளும் காங்கிரசை எதிர்த்துப்போராட முடியாது என்ற உண்மையை, நாலு ஆண்டு நிகழ்ச்சிகள் நிரூபித்து விட்டன. 1971-72 தேர்தல்களின் போது படுதோல்வி கண்ட அந்த "மகா கூட்டணி" என்ன செய்தது? அந்த மகா கூட்டணியில் இருந்த சில காங்கிரஸ் எதிர்ப்பிக்கட்சிகளும் குழுக்களும் பகிரங்கமாகவே ஏகாதிபத்தியத்திற்கு துதிபாடின. பகிரங்கமாகவே நிலப்பிரபுக்களை ஆதரித்தன பகிரங்கமாகவே ஏகபோகங்களுக்கு ஆதரவாக முழக்கம் எழுப்பின

## மக்கள் விரோதக் கொள்கைகளை எதிர்க்க வேண்டுமென்றால்

இதிலிருந்து தெரிவது என்ன? ஆளும் காங்கிரசையும் அதனுடைய மக்கள் விரோதக கொள்கைகளையும் எதிர்த்துப் போராட வேண்டுமென்றால், ஏகாதிபத்தியத்திற்கு எதிராகவும் நிலப்பிரபுத்துவத்திற்கு எதிராகவும், ஏகபோக முதலாளித்துவத்திற்கு எதிராகவும் ஆன ஒரு போராட்டத் திட்டத்தை அடிப்படையாகக் கொண்டுள்ள — இடதுசாரி, ஜனநாயகக் கட்சிகள், குழுக்கள், ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் ஒன்றுபட்ட சக்தியினால் மாத்திரமே முடியும என்பது தெட்டத் தெளிவாகத் தெரிந்துவிட்டது.

## ஒன்றுபட்ட நடவடிக்கைகள்

இப்பொழுது வலது கம்யூனிஸ்ட் கட்சியின் போக்கில அசைவு ஏற்பட்டிருப்பதையும் மத்தியக் கமிட்டி கவனித்தது. இடதுசாரியிடமிருந்து உடைத்துக் கொண்டு காங்கிரஸ் முகாமில் வலது கம்யூனிஸ்ட் கட்சியைத் தள்ளிவிட்ட கொள்கை எதுவோ அந்தக்கொள்கைக்கு அப்பால், பெருகிவரும நெருக்கடியால நிர்ப்பந்திக்கப்பட்டு வலது கம்யூனிஸ்ட் தலைமையை ஓரளவு நகரும் படிச்செய்திருக்கிறது. ஆயினும், அந்த வலது கம்யூனிஸ்ட் கட்சி காங்கிரசுடன் சேர்ந்து கேரளத்தில் கூட்டாட்சி நடத்துவதினின்றும் பிய்த்துக் கொண்டு வரவில்லையென்பதையும், இந்தியா முழுவதிலும் காங்கிரஸ் ஆட்சி கடைபிடித்து வரும் அதே மக்கள் விரோதக் கொள்கைகளைத் தான் கேரள கூட்டணி ஆட்சியும் கடைப் பிடித்து வருகிறது எனபதையும் மறக்க முடியாது. அப்படி இருந்த போதிலும், வலது கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய தலைமையும், காங்கிரஸ் கட்சியுடன் சேர்ந்து மந்திரி பதவி வகிக்காத பெருவாரியான மாநிலங்களில் உள்ள தலைமையும், ஒன்றுபட்ட நடவடிக்கையில் கலந்து கொள்ளுமாறு நிர்ப்பந்திக்கப்பட்டார்கள். இப்படிப்பட்ட காட்சிகளைஇந்த ஆண்டுமே 15-ம நாள் நடந்த பம்பாய் பொதுவேலை நிறுத்தத்தின் போது பார்த்தோம் ஜூன் 30-ல் நடந்த பங்களூர் பந்தில் பார்த்தோம். ஜூன் 18-ல் நடந்த வேலை நிறுத்தத்தின்போது பார்த்தோம்.

ஜூலை 9-ல் நடந்த ஹூக்லிபந்தில்பார்த்தோம். எல்லாவற்றுக்கும் மேலாக கடந்த ஜூலை 27-ம் தேதி நடந்த மேற்குவங்க பொது வேலை நிறுத்தத்தின் போதும் பார்த்தோம். இந்த ஜூலை 27 பந்த் நடத்த வேண்டுமென்று ஒருபுறம் வலது கம்யூனிஸ்ட் கட்சி தனியாக அறைகூவல் விட்டதையும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உட்பட 5 இடதுசாரி கட்சிகள் சேர்ந்து மறுபுறம் அறைகூவல் விடுத்ததையும் பார்த்தோம்.

வெகுஜனப் பிரச்னைகள் மீது இந்த போராட்டங்களெல்லாம் வளரும் தோறும் வலது கம்யூனிஸ்ட் கட்சியின் அணிகளும தலைமையும் பழைய கொள்கைகளை கொஞ்சம் கொஞ்சமாக கைவிடத்தான் செய்வார்கள். அதாவது, 1969-ம் ஆண்டில் காங்கிரஸ் பிளவுக்குப் பிறகு, இடதுசாரி ஜனநாயக இயக்கத்தைச் சீர்குலைத்த, அந்தத் தவறான கொள்கைகளை வலது கம்யூனிஸ்ட் கட்சி படிப்படியாகக் கைவிடும் என்று மத்தியக் கமிட்டி நம்புகிறது.

சோஷலிஸ்ட் கட்சியின் போக்கு எப்படி உள்ளது? சிண்டிகேட் காங்கிரஸ் தலைமையிலான "மகா கூட்டணி" யுடன் சேர்ந்து கொண்டிருந்த பழைய கொள்கையைக் கைவிட்டு விட்டதாக சோஷலிஸ்ட் கட்சி பிரகடனம் செய்தாலுங்கூட, சில விஷயங்களில பழைய கொள்கையையே தொடர்ந்து கடைப்பிடித்து வருகிறது.

உதாரணமாக, வரப் போகும் உத்திரப் பிரதேச தேர்தலில், பழைய காங்கிரசுடனும் அதுபோன்ற இதர கட்சிகளுடனும் உடன்பாடு காண முயற்சிகள் செய்து கொண்டிருக்கிறது. இது மட்டுமின்றி, இந்திய-சோவியத் உடன்படிக்கை பற்றியும், மற்றும் பல தேசீய, சர்வதேசீய பிரச்னைகள் பற்றியும், சோஷலிஸ்டு கட்சி கொண்டிருக்கின்ற கொள்கை இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) ஒத்துக்கொள்ள முடியாது ஆயினும் பல்வேறு ஸ்தல போராட்டங்களில்செயல் ஒற்றுமையை ஏற்படுத்தியுள்ளது கண்டும்—ஒன்றுபட்ட தொழிற்சங்க கவுன்சில் (யு. சி. டி யு.) அமைத்துள்ளது கண்டும். மத்தியக் கமிட்டி மகிழ்ச்சி அடைகிறது. கூட்டும் போராட்டங்கள் மூலமாகவும், இடதுசாரி ஜனநாயகக் கட்சிகளின் மத்தியில் கருத்துக்களை பரிமாறிக் கொள்வதின் மூலம் இந்த வேற்றுமைகளை குறைத்துவிட முடியும் என்று மத்தியக் கமிட்டி நம்புகிறது.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட)யுடன் ஒத்துநிற்கின்ற இடதுசாரி, ஜனநாயகக் கட்சிகளின் மத்தியிலும் கூட (அதாவது, மேற்கு வங்கத்திலுள்ள 8 இடதுசாரிக் கட்சிகள்மத்தியிலும், கேரளத்திலுள்ள சோஷலிஸ்ட் கட்சி. கேரள சோஷலிஸ்ட் கட்சி, கர்ஷகத் தொழிலாளிகட்சி ஆகியவை மத்தியிலும், சில சமயங்களில் வேற்றுமைகள கிளம்பத்தான் செய்கின்றன. உதாரணமாக, மேற்கு வங்கத்திலுள்ள புரட்சி சோஷலிஸ்ட் கட்சியனாது (ஆர். எஸ். பி.) சட்டசபை நடவடிக்கையில் பங்கு கொள்வதா வேண்டாமா? என்ற பிரச்சினையில் 8 இடதுசாரிக் கூட்டணியிலிருந்து உடைத்துக் கொண்டு போயிற்று 1973 ஜூலை 27-ல் நடந்த மேற்கு வங்க பந்தில், ஆர். எஸ். பியும், எஸ் யூ சியும், பார்வர்டு பிளாக்கும் கலந்து கொள்ளாமல் ஒதுங்கி நின்றன. அதே சமயத்தில், இதர இடதுசாரிக் கட்சிகள் பந்த நடத்துமாறு அறைகூவல் விடுத்தன

இப்படிப்பட்ட வேற்றுமைகள் இக்கட்சிகள் மத்தியில் தோன்றினாலுங்கூட, வெகுஜன இயக்கத்தை வளர்க்க வேண்டிய தேவைகள் ஏற்படுவதால் — அவர்களெல்லாம் ஒன்றுபட்ட நடவடிக்கையில் இறங்கி வேலை செய்கின்றபோது— ஒரு சக்தி வாய்ந்த ஐக்கிய முன்னணி உருவாவதற்கான திசையில் இட்டுச்செல்லும் என்ற நம்பிக்கை மத்தியக் கமிட்டிக்கு உண்டு.

மத்தியக் கமிட்டியானது எல்லா இடதுசாரி, ஜனநாயகக் கட்சிகளுக்கும். குழுக்களுக்கும் ஸ்தாபனங்களுக்கும் அளிக்கும் வாக்குறுதி இதுதான். அதாவது குறிப்பிட்ட பிரச்சனைகளில் செயல் ஒற்றுமையைக் கட்டுவதற்கும் — முடிந்த இடங்களிலெல்லாம், ஆளும் காங்கிரசும் அதனுடைய அரசாங்கமும் கடைப்பிடிக்கும் மக்கள்விரோதக் கொள்கைகளை எதிர்த்துப்போராட அரசியல் ஐக்கியமுன்னணிகளை அமைக்கவும்— இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தன்னாலான சகல முயற்சிகளையும் செய்யும் என்று வாக்குறுதி கொடுக்கிறது. எங்களுடைய மத்தியக்கமிட்டி ஒருவிஷயத்தை தெரிந்து கொண்டுதான் இருக்கிறது அதாவது, ஒவ்வொரு கட்சியும், ஒவ்வொரு குழுவும், ஒவ்வொரு ஸ்தாபனமும் நாட்டை எதிர்நோக்கியுள்ள பிரச்சினைகளை அணுகுவதில், தனக்கென சொந்த அணுகு முறை இருக்கத்தான் செய்கிறது என்பதையும், அந்த அணுகு முறையானது இதர கட்சிகள், குழுக்கள், ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் முறையினின்றும் மாறுபட்டு இருக்கிறது என்பதையும் மத்தியக்கமிட்டி அறிந்துதான் உள்ளது.

ஆகவே, நாட்டு மக்களின் பொருளாதார, அரசியல் வாழ்க்கை பற்றிய சகல அம்சங்களையும் உள்ளடக்கிய ஒரு பொதுவான திட்டத்தை உருவாக்கிட முயற்சிப்பது யதார்த்த நிலையாக இருக்காது.

## கூட்டு நடவடிக்கைகளுக்கு உரிய பிரச்சினைகள்

ஆனாலுங்கூட, மக்களின் உடனடிக் கோரிக்கைகள் மீது ஏகாதிபத்தியத்திற்கு எதிராகவும், நிலப்பிரபுத்துவத்திற்கு எதிராகவும், ஏகபோக முதலாளித்துவத் திற்கு எதிராகவும் முடுக்கி விடக்கூடிய கூட்டு நடவடிக்கைக்கு, ஓரளவு குறைந்தபட்சத்திட்டத்தின் கீழ், அனைவரும் ஒன்றுசேர வேண்டும்.

இப்படி ஒன்று சேருவது சாத்தியமும, அவசியம்கூட. அதாவது மக்களை வாட்டி வதைத்துக்கொண்டிருக்கும் உடனடிப் பிரச்சினைகளான உணவுப்பிரச்னை மீதும், பஞ்சத்தினின்றும் மக்களைப் பாதுகாக்கும் பிரச்னைகள் மீதும் அனைவரும் ஒன்றுசேருவது சாத்தியமும, அவசியமும் அல்லவா! விலைவாசிகளைக் கட்டுப்படுத்தும்பிரச்சனைக்காகவும— தொழிலாளர்களுக்கும், ஊழியர்களுக்கும் வருமானத்தை அதிகரிக்கச்செய்யும் பிரச்னைக்காகவும் — வரிச்சுமையையும், கடன் சுமைகளையும் குறைப்பதற்கான பிரச்னைக்காகவும்— நியாய விலை கிடைக்கவும், விவசாயிகளுக்கு நிதிஉதவிகிடைக்கவும, மற்றும் சிறு வியாபாரிகள், சிறு உடமையாளர்கள் ஆகியோருக்கு நிதி உதவி கிடைக்கவும்— இது போன்ற மற்றும் பல உடனடிக் கோரிக்கைகளுக்காகவும் அனைவரும் ஒன்று சேர முடியும அல்லவா! ஒன்று சேருவது அவசியமும் அல்லவா? பொது மக்கள் மீதுபோலீஸ் தாக்குதல் அதிகரித்து வருவதையும், ஒடுக்கு முறையின் வேறுபல இயந்திரங்களின் தாக்குதல்கள் அதிகரித்து வருவதையும் எதிர்த்து, ஒன்றுபட்ட நடவடிக்கை எடுப்பதும்கூட சாத்தியமேயாகும். அரசு நிர்வாகத்தில் அதிகாரவர்க்கமும் அரசியல்வாதிகளும் நடத்தி வரும் ஊழல்களை எதிர்த்தும, அனைவரும் ஒன்றுபட்ட நடவடிக்கையில இறங்குவதும் சாத்தியமேயாகும.

பொது மக்களின் ஜனநாயக உரிமைகளை விரிவுபடுத்துவதற்காகவும், சோவியத் யூனியனுடன் உறவுகளைப் பலப்படுத்துவதற்காகவும், சீனவுடனும் பாகிஸ்தானுடனும் உறவுகளை சீர்படுத்திக் கொள்ளுவதற்காகவும் ஒன்றுபட்ட நடவடிக்கை எடுப்பது சாத்தியமேயாகும்.

அதே சமயத்தில், எல்லா இடதுசாரி, ஜனநாயகசக்திகளும், ஜாதிப் பிளவுகளையும், வகுப்புவாதப் பிரிவினைகளையும் எதிர்த்துப்போராட வேண்டியது அவசியமாகும். தங்களுடைய பொதுமொழி வளர்ச்சியடைய வேண்டுமென்று விரும்பும் சாதாரண மக்களின் நியாயமான உணர்ச்சிகளைப் பயன்படுத்தி. ஒரு மொழி பேசும் மக்களுக்கு எதிராக இன்னொரு மொழி பேசும் மக்களைத் தூண்டிவிடும் முயற்சிகளை எதிர்த்துப் போராட வேண்டியதும் அவசியமாகும்.

இந்த சீர்குலைவு சக்திகளுக்கு எதிராக, சாதாரண மக்களிடையே ஏற்படும் ஒற்றுமை மாத்திரம் தான், அவர்களுடைய நியாயமான உரிமைகளுக்காக நடத்தும் போராட்டத்தில், ஆளும் வர்க்கத்தை தங்களுடைய கோரிக்கைகளுக்கு இணங்க வைக்கும் உத்தரவாதமாக இருக்கும்.

மக்களின் வாழ்க்கையை பாதித்துக் கொதித்துக் கொண்டிருக்கும் பிரச்னைகள் மீது செயல் ஒற்றுமையை வளர்க்கும் போதே, இடதுசாரி, ஜனநாயக சக்திகள் தங்களுக்கிடையே ஒருவருக்கொருவர் வேறுபட்டிருக்கும அடிப்படைப்பிரச்னைகள் பற்றிபலனுள்ள முறையில் கருத்துப்பரிமாற்றம்செய்து கொள்ளவும் வேண்டும். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை பொறுத்தவரையில், அது தன்னுடைய கட்சித் திட்டத்திலும். கட்சி காங்கிரசில் நிறைவேற்றிய அரசியல் தீர்மானத்திலும், மத்தியக் கமிட்டித் தீர்மானங்களிலும் தெட்டத்தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளவாறு, இந்த அடிப்படைப் பிரச்சினைகளை அணுகும்.

இன்று நாட்டில் நிகழ்ந்து வரும் நிகழ்ச்சிகள், கட்சி எடுத்துள்ள நிலையே சரியானது என்று முழுக்க முழுக்க மெய்ப்பித்துள்ளது என்று மத்தியக் கமிட்டி கருதுகிறது. ஆயினுங்கூட, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியுடன் மாறுபட்டுள்ள கட்சிகளுடனும், குழுக்களுடனும், ஸ்தாபனங்களுடனும் கருத்துக்களை பரிமாறிக் கொள்ள மத்தியக் கமிட்டி விரும்புகிறது.

மக்களின் உடனடிப் பிரச்னைகள் மீது ஒன்றுபட்ட நடவடிக்கைகளில் ஈடுபடுவதுடன் கூடவே, அடிப்படைப் பிரச்னைகள் மீது சகோதர முறையில் கருத்துப் பரிமாற்றமும் நடத்தினால்-இந்தப் போக்கிலேயே, சாத்தியப்பட்ட அளவுக்கு அடிப்படைப் பிரச்னைகளில் பொதுவான கருத்தொற்றுமை உருவாகும். நாட்டிலே இடதுசாரி, ஜனநாயக இயக்கம் முழுவதும் ஒன்று சேருவதை சாத்தியமாக்கும் பொருட்டு இதர எல்லா இடதுசாரி, ஜனநாயக கட்சிகளும் குழுக்களும் ஸ்தாபனங்களும் பாடுபடுமென்று மத்தியக் கமிட்டி எதிர்பார்க்கிறது.

# ரெட்டணையில் அனுதாபிகள் குழு துவக்க விழா

திண்டிவனம், ஆக 2—

திண்டிவனம தாலுகா ரெட்டணை கிராமத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அனுதாபிகள் குழு துவக்க விழா கடந்த 28-ந் தேதி நடந்தது.

# வி. பி. சி. தாக்கப்பட்டதை கண்டித்து

## அரூரில் சர்வகட்சி பொதுக்கூட்டம்

5—8—73 மாலை 7 மணிக்கு

**வாணொலித் திடலில்**

தோழர் எம். வேடியப்பன் தலைமையில்

மார்க்சிஸ்ட்கம்யூனிஸ்ட், இந்திய கம்யூனிஸ்ட, அதிமுக, இந்திராகாங்கிரஸ், குடியரசு கட்சி தலைவர்கள் பேசுவர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீககதிர் அச்சகததில், (13, மூதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே, முத்தையா.